4 பக்கங்கள் 15 காசுகள்

பதிவு எண் எம். 8798.

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 11) மதுரை 14—8—73 செவ்வாய் (மலர் 190

## அறிவிப்பு

15—8—73-ந் தேதி நமது தீக்கதிர் அலுவலகத்திற்கு விடுமுறையாதலால் 17—8—73-ந் தேதி வெள்ளிக்கிழமை தீக்கதிர் இதழ் வெளிவராது.

நிர்வாகி,

தீக்கதிர்.

## வி. பி. சிந்தன் உடல் நிலை

சென்னை, ஆக. 13—

சென்னை ஸ்டான்லி மருத்துவ மனையில் சிகிச்சை பெற்றுவரும் தோழர் வி. பி. சிந்தன் உடல் நிலையில் முன்னேற்றம் ஏற்பட்டு வருகிறது. கத்திக் குத்துக் காயங்கள் ஆறி வருகின்றன.

தோழர் சிந்தன் தொடர்ந்து கஞ்சி உணவு சாப்பிடுகிறார். பிறர் உதவியின்றி அறைக்குள் மெதுவாக எழுந்து நடமாடுகிறார். இருப்பினும் இன்னும் பதினைந்து நாட்கள் ஆஸ்பத்திரியில் இருக்க வேண்டுமென்று டாக்டர்கள் தெரிவித்துள்ளனர்.

# விலைவாசி உயர்வு எதிர்ப்புப் பேரணி

## மதுரையில் பல்லாயிரக்கணக்கானோர் திரண்ட மாபெரும் ஊர்வலம்

மதுரை, ஆக. 12—

**மக்களை வாட்டி வதைக்கும் கொடிய விலைவாசி உயர்வுக்கு எதிராகவும், அதற்குக் காரணமாக இருக்கும் மத்திய, மாநில அரசுகளுக்கு எதிராகவும்—மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி, அ. தி. மு. க, இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி மற்றும் தோழமைக்கட்சிகளின் சார்பில் மதுரையில் இன்று மாபெரும் ஆர்ப்பாட்ட பேரணியும், பொதுக்கூட்டமும் நடத்தப் பட்டன.**

ஆகஸ்ட் 12-ல் தமிழகம் முழுவதும் விலைவாசி உயர்வை எதிர்த்து மேற்கண்ட கட்சிகளின் சார்பில் நடத்தப்பட்ட பேரணியின் ஒரு பகுதியாக இந்தஆர்ப்பாட்ட ஊர்வலம் நடத்தப்பட்டது. இதில் பல்லாயிரக் கணக்கானவர்கள் கலந்து கொண்டனர். பல் வேறு ஊர்களில் இருந்தெல்லாம் இந்தப் பேரணிக்குத் திரண்டு வந்திருந்தனர்.

தோழமைக் கட்சிகள் தங்களது கொடிகளையும், பானர்களையும் தாங்கி வந்தனர். பலவேறு தொழிற் சங்கங்கள், விவசாயிகள் சங்கம், மாதர்கள் சங்கம் மற்றும் பல்வேறு அமைப்புகளும் பேரணியில் கலந்து கொண்டன.

ஊர்வலம், மாலை 5-15 மணிக்கு கட்டபொம்மன் சிலையிலிருந்து வானதிரும் முழக்கங்களுடன் புறப்பட்டது.

### முழக்கங்கள்

"விலைவாசி ஏறிப்போச்சு
வேதனைகள் பெருகிப்
போச்சு
இது தானா சோசலிசம்?
இந்திராகாந்தி
சொல்லட்டும்!
கருணாநிதி சொல்லட்டும்"!
—என்றும்,
"மத்திய மாநில அரசுகளே
பதுக்கல்காரர்களைக் கைது
செய்!
கள்ளமார்க்கெட்காரர்களை
கைது செய்!
பற்றுக்குறை பட்ஜெட்—
போடாதே
கரன்சிநோட்டு
அடிக்காதே!
—என்றும்

தோழர் வி பி சிந்தன் தாக்கப்பட்டதை கண்டித்தும்,

'தோழமைக் கட்சிகளின் ஒற்றுமை ஓங்குக! என்றும் முழக்கங்களை எழுப்பியவண்ணம் ஊர்வலம் கம்பீரநடை போட்டுச்சென்றது.

### கொட்டும் மழையிலும்...

ஊர்வலம் ஆரம்பிக்கும் போதேமழையும்பெய்ய ஆரம்போதிலும் நனைந்து கொண்டே சிறிதும் உற்சாகம் குன்றாது பேரணியில் சென்றனர்.

நூற்றுக் கணக்கான சைக்கிள்களும் ஏராளமான ரிக்ஷாக்களும் கலந்து கொண்டன.

தி மு க அரசின் காட்டுமிராண்டித்னமான அடக்குமுறையை சித்தரிக்கும வகையில், ஒரு கம்பு மீது இரண்டு குறுக்கெலும்புகளுக்கு நடுவே மண்டையோடு வைக்கப்பட்டு கொண்டு வரப்பட்டது. விலைவாசிக் கொடுமையைச் சித்தரிக்கும் கார்ட்டூன் தட்டிகள் கொண்டுவரப்பட்டன.

ஊர்வலத்தினை, வீதியின் இருமருங்கிலும் நின்று ஆயிரக்கணக்கான மக்கள் கண்டு ஆரவாரம் செய்து வரவேற்றனர்.

நான்கு மாசிவீதிகள் வழியே ஊர்வலம் திலகர் திடல் அடைந்தது.

அங்கு வெள்ளமென மக்கள் திரண்டிருந்த பொதுக்கூட்டத்திற்கு திரு. கா. மாயத்தேவர் எம். பி. தலைமை வகித்தார்.

விலைவாசி உயர்வைக் கண்டித்தும் அதற்குக் காரணமான மத்திய—மாநில அரசுகளைஎதிர்த்துப் போராட வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்தியும்மார்க்சிஸ்ட்கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் தோழர் ஆர். உமாநாத், இந்தியக் கம்யூனிஸ்ட் சார்பில் எம். ராமமூர்த்தி, தமிழ்நாடு முஸ்லிம் லீக் சார்பில் அம்சாமுகம்மது அ.தி.மு.க. சார்பில் கே. எம், எம். மேத்தா, எஸ். எஸ். ஆர். ராஜேந்திரகுமார் மற்றும் பலர் பேசினர்.

## சென்னையில் பிரும்மாண்ட அணிவகுப்பு

மாநிலத்தின் தலைநகரான சென்னை மாநகரில், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி, அ.தி.மு.க. இந்தியக் கம்யூனிஸ்ட் மற்றும் தோழமை கட்சிகள்சார்பில் 'விலைவாசி உயர்வு எதிர்ப்புப் பேரணி' பிரம்மாண்டமான முறையில் நடந்தது.

இதில் தோழமைக் கட்சிகளைச் சார்ந்த பல்லாயிரக் கணக்கான மக்கள் கலந்து கொண்டு தங்களது கண்டன முழக்கத்தை எழுப்பினர்.

இறுதியில் நடந்த மாபெரும் பொதுக்கூட்டத்தில் தோழமைக் கட்சித் தலைவர்கள் பேசினர்.

இதே போன்று, மாநிலத்தின் அனைத்து நகரங்களிலும் பிருமமாண்டமான முறையில் பேரணிகள் தோழமைக்கட்சிகள் சார்பில் நடந்தன.

## பலுசிஸ்தானில் சுயநிர்ணய உரிமை மக்களும் ராணுவமும்மோதல்

ராவல்பிண்டி, ஆக. 12—

பாகிஸ்தானில், சுய நிர்ணய உரிமை கோரிப் போராடிவரும் பலுசிஸ்தான் மாகாண மக்கள் மீது அம்மாநில பாதுகாப்புபடை துப்பாக்கி பிரயோகம் நடத்தியது. அதன் காரணமாக மக்கள் போலீசாரோடு மோதவேண்டிய நிலை ஏற்பட்டது. மோதலில் 5மக்கள் சுட்டுக் கொள்ளப்பட்டனர். 12 போ காயமடைந்தனர். பாதுகாப்பு படையினரில் 6 பேர் மாண்டனர். 12 பேர் காயமடைந்தனர்.

# இந்தியாவின் மீது அமெரிக்காவின் முற்றுகை அபாயம்

## தோழர் உமாநாத் எச்சரிக்கை

மதுரை ஆக. 12—

**நேற்று மதுரை திலகர்திடலில்மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் தோழர் கே. வாசுதேவன் தலைமையில் பொதுக்கூட்டம் நடைபெற்றது. இக்கூட்டத்தில் பேசிய சி. ஐ. டி. யூ. மாநிலச் செயலாளர் தோழர் ஆர். உமாநாத் இந்தியாவை அமெரிக்கா முற்றுகையிட்டுள்ளது. இது குறித்து தொழிலாளிவர்க்கம் விழிப்புடன் இருக்க வேண்டுமென்று எச்சரித்தார். தோழர் உமாநாத் பேச்சின் முழு விவரம் வருமாறு:**

அறுபத்திமூன்று நாட்களாக உறுதியுடன் போராடுகின்ற கோகோ கோலா, தொழிலாளர்களுக்கு முதற்கண்வாழ்த்து தெரிவித்துக்கொள்கிறேன். இந்த கோகோ கோலாத் தொழிலாளர்கள் போராட்டமே, கருணாநிதியின் கையாலாகாத்தனத்தை தெளிவுபடுத்துகிறது. மாநில சுயாட்சிக்காகசசத்தம்போடும் கருணாநிதி; கோகோகோலா தொழிற்சாலை ஜனதிபதியின் மகளுடையது என்பதற்காக நிர்வாகத்திற்கு தனது அதிகாரததை உபயோகித்துக் சட்டலை போட பயபபடுகிறார்.

### அமெரிக்க ஆபத்து

சுரண்டலுக்கு ஆளாகும் வர்க்கம் சுரண்டல் நடத்துபவனை முறறுகை போடுவது இந்த நாட்டு போராட்டங்களுள் ஒன்று;

ஆனால் அமெரிக்கா நமது இந்திய நாட்டையே முற்றுகையிடுகிறது. நாம் பாகிஸ்தானிய சர்வாதிகாரத்தின் காலையும் கையையும் உடைத்த பிறகு அமெரிக்கா பாகிஸ்தானுக்கு இப்பொழுது பயங்கரமாக ஆயுத சப்ளை நடத்துகிறது.

யுத்தக்கப்பல்கள், விமானங்கள், பீரங்கிகள் அனைத்தும் அமெரிக்காவிலிருந்து பாகிஸ்தானுக்கு சப்ளையாகின்றன.

ஈரான் நாட்டை தனது ஆயுதக்கிடங்காக நிக்சன் மாற்றியுள்ளான். இது எதற்காக? பாகிஸ்தானுக்கு தாங்கள் நேரடியாக சப்ளை செய்கின்ற ஆயுதத்தில் பற்ருக்குறை ஏற்பட்டால் ஈரானிலிருநது உடனடியாகச் சபளை செய்யத்தான் ஈரானில் படைக்கலன்கள் குவிக்கப்பட்டுள்ளன.

இந்தியாவுக்கு மேற்கே, பாகிஸ்தான் எல்லையில் உள்ளது ஈரான். பாகிஸ்தான்—ஈரான் எல்லையில், விமானத் தளமும், கப்பல் தளமும் வேறு நிக்சனல் கட்டப்படுகின்றன. நிக்சன் என்ன குஷிக்காவா இவற்றை கட்டுகிருன்? இது குறித்தொன்றும் இந்திராவுக்கு கவலை கிடையாது: எனவே தொழிலாளி வர்க்கம் இது குறிதது விழிப்புடன் இருக்க வேண்டும். செத்துப்போன 'சென்டோ' ஒப்பந்தத்தை நிக்சன் புதுப்பித்துள்ளான். அதில் ஈரானுக்குசிறப்பான இடத்தைக் கொடுத்துள்ளான்.

வியட்னமில் சரியான உதை வாங்கின நிக்சன். கம்போடியாவில் வாங்கிக் கட்டிக் கொண்டிருக்கின்ற நிக்சன் ஆசியாவில் தனது செல்வாக்கை ஏற்படுத்த இந்தியாவை முற்றுகையிடுவதற்கான தயாரிப்புகளில் மூழ்கியுள்ளான்.

அதற்காகமேற்கே ஈரானை தளமாக்கிய நிக்சன் கிழக்கு பங்களாதேஷை தளமாக்க முயற்சிக்கிருன். அங்கு ஏற்பட்டிருக்கின்ற பொருளாதார நெருக்கடியை உபயோகித்து உதவி அளிப்பதாக வாக்குறுதி கொடுக்கிருன். இந்திய எதிர்ப்புப் பிரசாரத்தை வாஷிங்டனில் இருந்து கொண்டே பங்களாதேஷில் கிளப்பி விடுகிருன்.

அடுத்துவடக்கேசிக்கிமை துணைக்கு போட்டுக் கொண்டுள்ளான். சிக்கிம் மன்னர் மனைவி அமெரிக்கக்காரி, அவள் சிக்கிம் சரித்திரத்தையே மாற்றி எழுதி விட்டாள். புது சரித்திரத்தில் சிக்கிம் இந்தியாவைச்சார்ந்திருக்கும் நாடல்ல, அது சுதந்திர நாடென்று எழுதப்பட்டுள்ளது.

'குகலி' என்ற சிக்கிம் மொழி மாற்றப்பட்டு அமெரிக்க ஆங்கிலம் பாடமொழியாக்கபபட்டுள்ளது.

அடுத்து தெற்கே இந்து மகா சமுத்திரத்தில் 'டயகிரேசியா' தீவில் அமெரிக்க ராணுவத் தளம் ஏற்படுத்தப்பட்டுள்ளது. இப்படி நமது நாட்டை சுற்றி அமெரிக்க முற்றுகை பலமாகி உள்ளது.

அமெரிக்காவினுடைய பிரதான நோக்கம் இந்தோ-சோவியத் ஒப்பந்தத்தைத் தகர்க்க வேண்டுமென்பதும் இந்தியாவைத் தனது சுரண்டல் நாடாக மாற்றவேண்டுமென்பதும்தான்.

### ஜனசங்-சிண்டி

இந்த நேரத்தில்தான் ஜனசங்கமும் சிண்டிகேட் காங்கிரசும் இந்தோ--சோவியத் ஒப்பந்தத்தை தூற்றிப் பேசுகின்றன.

சுதந்திரா பிலுமோடி தூற்றி பேசுகிருர்.

இதிலிருந்து இந்த கட்சித் தலைவர்கள் இங்கு வேலை செய்வது நமக்காக அல்ல, டாலருக்காகத்தான் என்பது தெளிவாகிறது.

### இந்திரா தலைக்கு மேலே கத்தி

இனி வெளியே நிக்சன் முற்றுகை, மேலே குறிப்பிட்டவாறிருந்தால் இந்தியாவுக்குள்ளே, இந்திரா தலைக்கு மேலே அமெரிக்க கத்தி தொங்குகிறது. அதாவது பி. எல் 480 வாயிலாக கோதுமை வாங்கிய பணம் அமெரிக்காவுக்கு இந்தியா 2260 கோடி ரூபாய் கொடுத்துள்ளது. இப்பணத்தை நிக்சன் தன் நாட்டுக்குக் கொண்டு செல்லாமல் இந்திய பாங்குகளிலேயே போட்டுள்ளான்.

இந்தப் பணத்தை நிக்சன் இங்கு அவிழ்த்துவிட்டால் இப்பொழுது ஏறிக்கொண்டிருக்கும் விலைவாசி கண்ணால் பார்க்க முடியாத அளவு மேலும் ஏறிவிடும்.

இப்படிப்பட்ட கத்தி நிக்சன் கையில்கிடைக்கக்காரணம் யார்? 25 வருட காலம் இந்த நாட்டை ஆண்டு முடித்த இந்திராவும், காமராஜரும், லால்பகதூரும், நேருவும்தான் காரணம.

இப்படிப்பட்ட நிக்சனுக்கெதிராகப் போராடுங்கள் என்று மக்களுக்கு உத்திரவு போடவேண்டிய நேரத்தில் இந்திராகாந்தி, நிக்சனுடன் பொது ஒப்பந்தம் செய்யவும் நட்புறவு வளர்க்கவும் சந்தர்ப்பம் கிடைக்குமா என்று ஏங்கி காத்து கிடக்கின்ருர்.

ஆனல் இந்த நாட்டில் ஒரே ஒரு ஸ்தாபனமும், கட்சியுமதான் நிக்சனுக்கெதிராக அவனுடைய சூழ்ச்சியை உணர்ந்து குரல் கொடுக்கிறது. அது சி ஐ டி யூ ஸ்தாபனமும், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியும்தான்.

இந்தியா இன்று சுடுகாடாகிக் கொண்டிருக்கிறது. யுத்தத்திற்கு பாதுகாப்பாக, பாதுகாப்புச் சட்டம் கொண்டு வரப்பட்டது. ஆனல் இன்று சென்னை டெலிபிரிண்டர் தொழிலாளர் போராட்டமென்ருல் பாதுகாப்புச் சட்டம்! உ. பி, போலீஸ் போராட்டமென்ருல் பாதுகாப்புச் சட்டம்! பீகார் ஆசிரியர் போராட்டமா-பாதுகாப்புச் சட்டம், தமிழ்நாடு மின்சார ஊழியர் போராட்டத்திற்கு பாதுகாப்பு சட்டம். ரயில்வே தொழிலாளர் போராட்டத்துக்குப் பாதுகாப்புச்சட்டம்.

### லோகோ தொழிலாளர்கள் போராட்டம்

ஆனல் இந்தப் பாதுகாப்புச் சட்ட பூச்சாண்டியை தகர்த்தெறிய கிளம்பிவிட்டான் லோகோ ரன்னிங் தொழிலாளி.

இன்று லோகோ ரன்னிங் தொழிலாளர்கள் போராட்டம் வாயிலாக பாதுகாப்புச் சட்டம் என்பது புலியல்ல புலித்தோல் என்பதும், அந்தப் புலித்தோலை போர்த்தியிருப்பது 'மத்திய அரசு' என்ற கழுதைதான் என்பதையும் தொழிலாளி வர்க்கம் புரிந்துகொண்டு விட்டது.

சிகாகோவில் போராடிப் பெற்ற 8 மணி நேர வேலை என்ற உரிமை லோகோ தொழிலாளர்களுக்கு மறுக்கபபடுகிறது, இந்த அநாகரிகத்தை வர்ணிக்க தமிழில் வார்த்தையே இல்லை,

### ரயில் விபத்து ஏன்?

இதனல்தான் ரெயில்வே விபத்துகள்ஏற்படுகின்றன. பம்பாயில் வாரத்துத்துக்கு மூன்று ரயில் விபத்துகள். மூன்று பெரிய போராட்டங்கள் வாயிலாக லோகோ தொழிலாளர்கள் வேலை நேரத்தை குறைக்கப் போராடியிருக்கிருர்கள். ஆனல் அதை உணர்ந்துக் கொள்ள இந்திரா அரசு தயாராகக் காணேம் காரணம் என்ன?

எட்டுமணி நேர வேலை நேரம் என்று அமைத்தால் அதிக டிரைவர்கள் பயர்மென்கள் நியமிக்கவேண்டியது ஏற்படும். அனுவசிய செலவுகளுக்கு பணத்தை அள்ளிக் கொட்டும் இந்திரா, மக்களின் உயிர் பிரச்சினையில் பண சிக்கனததை பார்க்கின்ருர்.

ரயில்வே அமைச்சர் மிஸ்ராவுக்கு ரயில்வேயைப் பற்றி எந்தக் கவலையும் கிடையாது பீகாரில் பணம் சம்பாதித்த பாண்டே விரட்டியடிக்கப்பட்டு இவருடைய கபூரின் ஆட்சி அமைக்கப்பட்டுள்ளது. மிஸ்ராவின்கண்ணும், கவனமும் பீகாரில் தான்.

இனி ரயில் விபத்து ஏற்பட்டால் அதற்காகத் தண்டிக்கப்படவேண்டியவர்கள் இந்திராவும் மிஸ்ராவுமேதான்.

இப்படியொரு தீரமான போராட்டம் நடத்துகின்ற ரெயில்வேத் தொழிலாளர்களுக்கு நாம் பக்கபலமாக நிற்கவேண்டும்.

அடுத்ததாக திண்டுக்கல் தேர்தல் வாயிலாகவும், பல்வேறு தொழிலாளி வர்க்க போராட்டங்களின் வீச்சு காரணமாகவும் எதிர்காலத்தை உணர்ந்து கொண்ட கருணாநிதிஇன்று பல்வேறு சாகசங்கள் காண்பித்து ஆட்சியைக் காப்பாற்றிக் கொள்ளப் பார்க்கிருர்.

### குழிக்குள் விழுந்த வம்பன்

திண்டுக்கல், தி. மு க. வுக்கு தோல்வியல்லவாம். சரிவுதானும். இது குழிக்குள் தலைகுப்புற விழுந்த வம்பன் எனது கால்கள் மேலே நோக்கித்தானே இருக்கின்றன என்று சொன்னதைப் போலுள்ளது.

கருணாநிதி, உங்களால்இனிதப்பிக்கமுடியாது உங்கள் கொடுங்கோன்மைக்கு ஆளான லட்சக் கணக்கான தொழிலாளி--விவசாயி மாணவாகளுக்கு நீங்கள் பதில் சொலலித்தான் ஆகவேண்டும்.

மக்களை திசை திருப்ப மாநில சுயாடசி என்ற 'சூ மந்திரகாளி' வேலையை காண்பித்த கருணாநிதி வன்முறையைத் துணையாக அரவணைத்துள்ளார்.

### வி. பி. சிந்தன்

வி பி சி பிரச்சினையைப் பாருங்கள். நோட்டீஸ்வெளியிட்டு திட்டமிட்டு படுபயங்கரமான கொலைத்தாக்குதல் நடைபெற்றது.

அடுத்தநாள் கண்ணீர் விடுகிருர் கருணாநிதி "நான் வருந்துகிறேன, சம்பந்தப்தப்பட்டவர்கள் மீது கடுமையான நடவடிக்கை எடுக்க உத்திரவு போடுவேன்" என்று பத்திரிகையாளர்களிடம் சொல்கிருர்.

கருணாநியாரே! "தாக்கப் போகிருேம், கொல்லப் போகிருேம்" என்ற நோட்டீஸ்உங்கள் கையிலும்,ஐ ஜி கையிலும், டி எஸ் பி ராமதாஸ் கையிலும் தரப்பட்டனவே அதைக் கண்ட பிறகு நீங்கள் என்ன நடவடிக்கை எடுத்தீர்? சம்பவம் நடந்தபிறகு நீங்கள் உத்திரவு போடாமலேயே, போலீஸ் நடவடிக்கை எடுக்குமே அதறகுத்தானே அவர்களுக்குச் சம்பளம் போடுவது,

### சதித்திட்டம்

மாவட்ட மார்க்சிஸ்ட் கட்சி செயலாளர் தோழர் பரமேஸ்வரன், ஐ ஜியிடம் போன் வாயிலாக நோட்டீசை படித்து காண்பித்து விவரங்கள் சொன்னபோது ஐ ஜி பதில் கொடுத்தார், "தக்க ஏற்பாடுகளை நான் செய்கிறேன்" என்று இப்பொழுதுதான் தெரிகிறது. கொலை செய்ய முயற்சிதத வர்களுக்கு பாதுகாப்பளித்ததுதான் இவர் செய்த ஏற்பாடு என்று!

சரி, தெரிஞ்சும் பாதுகாப்பு ஏற்பாடு செய்யாத ஐ ஜி மீது கருணாநிதி என்ன நடவக்கை எடுததார்?

"நான் தெரியவேண்டியதைத் தெரியவேண்டிய இடத்தில் இருக்கிறேன்" என்று சொன்ன கருணாநிதிக்கு இந்த சதித்திடடம

(4—ம் பக்கம் பார்க்க)

# 'விடுதலைப் போரின்போது சிறையில் கிடைத்த வசதிகூட இன்று நாட்டில் இல்லை'

—ஜனதிபதி கிரி.

புதுடெல்லி, ஆக. 12—

**'விடுதலைப் போராட்ட காலத்தில் கைதாகி, சிறைவாசம் இருந்தவர்களுக்குக் கிடைத்த வாழ்க்கை வசதிகள்கூட இன்று நாட்டில் இல்லை.**

**விடுதலைப் போராட்ட காலத்தில் சிறையில் இருந்தவர்கள் ஒவ்வொருவரும், ஒரு வேளை நிச்சயமான சாப்பாடு, குறைந்த பட்ச வசதிகள் ஆகியவைபெற முடிந்தது.**

—இவ்வாறு "லிங்க்" என்னும் ஆங்கில வார இதழுக்கு, அளித்த விசேட பேட்டியில் ஜனதிபதி கிரி கூறினர்.

நாடு விடுதலை பெற்று, 26 ஆண்டுகள் நிறைவு பெற்று—"வெள்ளி விழாவும்" கோலாகலமாகக் கொண்டாடி முடித்தபிறகு—இப்போது இந்தியாவின் லட்சணம் பற்றி இந்திய ஜனதிபதி கிரியே இவ்வாறு கருத்துக்கூற நேர்ந்துள்ளது.

# தீக்கதிர்

## பற்றுக்குறையைச் சரிக்கட்ட அரசு ஊழியர்கள் மீது கோடாரி வீச்சா?

பற்றுக்குறை பட்ஜெட் போட்டு பணவீக்கத்தை அதிகப்படுத்தி விட்டதால், விலைவாசிகளெல்லாம் என்றும் காணாத அளவுக்கு ஏறிவிட்டன.

இந்தப் பணவீக்கமும் விலைவாசி உயர்வும் அரசாங்கத்தின் அடித்தளத்தையே நொறுக்கிக் கொண்டிருக்கின்றன.

சென்ற ஆண்டு சுமார் 850 கோடி ரூபாய் வரையும் பற்றுக்குறை விழுந்தது. நோட்டு அச்சடித்துக்கொண்டனர். இந்த ஆண்டும் அதைவிட மோசமான நிலைமை தான் ஏற்படும்.

அமெரிக்காவிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட கோதுமைக்கு சென்ற ஆண்டு, 1 டன்னுக்கு 600ரூபாய் கொடுக்கப்பட்டது இந்த ஆண்டு கோதுமை விலையை ஏற்றி விட்டதால், 1 டன்னுக்கு 900 ரூபாய் பிடுங்குகிறார்கள் இதனால் முன்னைவிட 300 ரூபாய் வீதம் ஒவ்வொரு டன்னுக்கும் கூடுதலாகக் கொட்டிக் கொடுக்கப் படுகிறது.

இந்த ஆண்டு கூடுதல் கோதுமை இறக்குமதிக்காக ரூ. 650 கோடி செலவழிக்கவேண்டியிருக்கிறது.

இப்படி நிதிப்பற்றுக்குறை பெரிய அளவில் ஏற்பட்டுவிட்டதால், இத்தனை செலவுகளுக்கும் ஈடு கொடுப்பது எப்படி என்ற கவலை, இந்திய சர்க்காரின் மண்டையைக் குடைகிறது.

இதுகுறித்து மத்திய மந்திரி சபையின் அரசியல் விவகாரக் கமிட்டியும், பொருளாதாரக் கொள்கை கமிட்டியும் கூடி சிக்கனம்பற்றி விவாதித்தனர்.

1973—74-ம் ஆண்டிலே எப்படியாவது 500 கோடி ரூபாய் அளவுக்கு செலவைச் சிக்கனப்படுத்தவேண்டுமென்று இக்கமிட்டிகள் தீர்மானித்துள்ளன.

அரசாங்க நிருவாகத்தில் சிக்கனம் ஏற்படுத்தப் போகிறார்களாம்.

பொதுத்துறையில் நடைபெறும் பேங்குகள், எல் ஐ சி, இதர தொழில்கள் ஆகியவற்றிலும் வெட்டு விழுமாம்.

எப்படியாவது 20 சதவிகிதம் செலவினங்களில் வெட்டு விழும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

திட்டம் அல்லாத செலவினங்களிலும் வெட்டு விழுமாம்.

அமுல் நடத்தப்படவிருக்கும் சில திட்டங்களும் கைவிடப்படுமாம்.

சமூக நலச் செலவுகளிலும் வெட்டு விழுமாம்.

மாநிலங்களிலும், சிக்கனத்தைக் கடைப்பிடிக்க வேண்டியது பற்றி மாநில அரசுகளின் பிரதிநிதிகளைக் கூட்டி வைத்துப் பேசப்போகிறார்களாம்.

விழும் வெட்டுகள் எல்லாம் சாதாரண ஊழியர் கழுத்தில் விழும் என்பது நமக்கு அனுபவ வாயிலாகத் தெரியும்.

மத்திய அரசு ஊழியர்கள், எல். ஐ. சி ஊழியர்கள், தேசவுடமை வங்கிகளின் ஊழியர்கள், பொதுத்துறை தொழில்களில் பணியாற்றும் ஊழியர்கள், மாநில அரசு ஊழியர்கள், மாநில அரசு சம்பந்தப்பட்ட தொழில்களில் பணியாற்றும் ஊழியர்கள் ஆகியோரின் கழுத்தில் வெட்டு விழும்.

அதாவது, அவர்களுக்குக் கொடுக்கப்பட்டுவரும் பிராயணப்படி போன்ற பல்வேறு அலவன்ஸ்களிலும் வெட்டுவிழும்; போலீஸ்காரர்களுடைய பிரயாணப்படியும் குறைக்கப்படும்.

வருமானம் இல்லாத சமூகம் பணிகளில்ஈடுபட்டிருக்கும் சமூக நல ஊழியர்கள், அதிகாரிகளின் வேலைக்காரர்கள் ஆகிய பலருக்கும் வேலை பறிபோகும்.

அவர்கள் செய்துவந்த வேலையை மற்ற ஊழியர்கள் மீது போட்டு கூடுதல் வேலை கூடுதல் நேரம் செய்யும்படி நிர்ப்பந்திப்பார்கள்.

பெரிய அதிகாரிகளின் கொள்ளைச் சம்பளமோ ஊதாரிச செலவுகளோ ஒன்றும் குறையாது.

ஒரு டைரக்டரின் கீழ் அவரது டெபுடி அவரது உதவி டைரக்டர்கள் சொந்த உதவியாளர்கள் (பி. ஏ) ஆகிய ஐந்தாறு பேருக்கு வழங்கும் சம்பளம் அலவன்ஸ் இதர வகைகள் அந்த டிபார்ட்மெண்டிலுள்ள 50 அல்லது நூறு ஊழியர்களின் மொத்த சம்பளத்தில் பாதிக்மேலேயே இன்று தரப்படுகிறது. இதில் மாறுதல் இருக்காது. மாறாக சிக்கனம் என்ற பேரால ஊழியர்கள் எண்ணிக்கை குறைக்கப்படும்.

நாட்டிலே கொள்ளையடிக்கும் ஏகபோகங்கள், நிலப்பிரபுக்கள் மீது கை வைத்து, பணத்துக்கு வழி தேடாமல் சிக்கனம் என்ற பேரால், ஏழை நடுத்தர ஊழியர்களையே தாக்கப்போகிறார்கள்.

## பொதுப்பணித்துறை தொழிலாளர் போராட்ட அறிவிப்பு

வத்திராயிருப்பு, ஆக. 9—

பிளவக்கல் அணைத்திட்டத்தில் பணி செய்யும் வேலையை முன்னிட்டுபணியாளர்களின் மாபெரும் பொதுக் கூட்டம், திட்டப் பகுதி ஆரம்பப் பள்ளி கட்டிடத்தில் பொதுக் காரியதரிசி திரு. தொழிலன் தலைமையில் நடைபெற்றது.

அது சமயம் தலைவராக திரு கே. என். நடராஜனும், துணைத் தலைவராக திரு கணபதியும் செயலாளராக திரு வி இராசையாவும், உதவியாளராக திரு வி. இராசுவும், பொருளாளராக திரு. இ. வர்க்கீசும் மற்றும் திருவாளர்கள் பாவாடை, ஆறுமுகம், தங்கமணி மைக்கேல், உலகநாதன், காசி ஆகிய செயற்குழு உறுப்பினர்களும் தேர்வு பெற்றனர்.

பின் தங்கிய இராமநாதபுரம் மாவட்டத்தில நடக்கும் பிளவக்கல அணை தொழிலாளர்களது கோரிக்கைகளை ஏற்கப்படாவிடில் மறியல் செய்வது என்று முடிவு செய்யப்பட்டது. மற்றும பல தீர்மானங்கள நிறைவேற்றப்பட்டன.

அனைத்துக்கட்சிகள் சார்பில் ஒரு போராட்டக் குழுவும அமைக்கப்பட்டுள்ளது.

## மதுரை தாலுகா விவசாயிகள் சங்கத்தின் எழுச்சிமிகு மாநாடு

## 300 பெண்கள் உள்பட ஆயிரக்கணக்கானோர் ஊர்வலம்

### மார்க்சிஸ்ட் கட்சி தலைவர்கள் வாழ்த்துரை

மதுரை, ஆக. 12—

**மதுரை மாவட்ட விவசாயிகள் சங்கத்தின் 7-வது மாநாடு கடந்த 8-ந் தேதி நரசிங்கத்தில் சீரும் சிறப்புமாக நடந்தேறியது.**

**மாநாட்டையொட்டி நரசிங்கம் முழுதும் சிவப்பு வண்ணக் கொடிகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தது.**

மதுரை மாவட்டமெங்கிலுமிருந்து தேர்வு பெற்ற 150 ஆண், பெண் விவசாயிகள் பிரதிநிதிகளாக கலந்து கொண்டனர்.

சரியாக காலை 11 யூனியளவில் பொதும்புத்தோழர் பி கருப்பையா, மாநாட்டு பந்தலுக்கு முன்னால் கொடியேற்றிச் சிறப்புரை நல்கினார்.

'வெண்மணியில் சாம்பலான எங்கள் இனமே! உன் நினைவில் உருவாக்குகின்றோம்' விவசாயச் சங்கத்தை என்று உழவர் பெருங்குடி மக்கள் திறந்திருந்த வெண்மனிச் சிலைகளுக்கு பொதும்புத் தோழர் காத்தாயியம்மாள் மலர் மாலையை அணிவித்தார்.

கூடி நின்ற கொள்கைப் படை வீரர்கள் விண்னதிர உணர்ச்சிமிகு உரிமைக் கோஷங்களை முழக்க மாநாடு ஆரம்பமாகியது.

நரசிங்கம் ஊராட்சி மன்றத்தலைவர் தோழர் வி சுந்தர்ராஜ் மாநாட்டிற்குத் தலைமையேற்று உரை நிகழ்த்தினார். மாநாட்டின் தொடக்கத்தில் கேரளத்தலைவர் தோழர் சி. எச். கணரன் மறைவிற்கும், வீனர்களால் கொலையுண்ட வீரத்தலைவன் தோழர். அழிக்கோடன் மறைவிற்கும் விவசாயச் சங்க வட்டக் குழு உறுப்பினர் வீராயி அம்மாள் மங்களக்கு வெல்லக்கன்டன் ஆகியமறைந்த தோழர்களுக்கும் மற்ற தியாகிகளுக்கும் அஞ்சலித் தீர்மானமும் நிறைவேற்றப் பட்டது.

31—5—70 ந் தேதிக்குப் பின் நடந்து முடிந்த வேலை அறிக்கையை மதுரை வட்டச் செயலாளர் தோழர் கே. சுப்பையா சமர்ப்பித்து விளக்கிப் பேசினர். அதன மீது பிரதிநிதிகள் விவாதித்தார்கள். பின் அறிக்கை ஏகமனதாக ஏற்றுக் கொள்ளப்பட்டது.

#### சகோதர வாழ்த்து

மதுரைமாவட்டமாணவர் சங்கம் எஸ். எப். ஐ. சார்பாக தோழர் எஸ். பாலதண்டாயுதபாணியும், மதுரை - முகவை மாவட்ட மது மரத் தொழிற்சங்கத்தின் சார்பில் கே. அய்யாவும், எவர்சில்வர் தொழிற் சங்கத்தின்சார்பில் தோழர் ஜாபரும். ஊராட்சி மன்றத் தொழிலாளர்கள் சார்பில் தோழர் கந்தனும் வாழ்த்துரை நல்கினா. மதுரை மாதர் சங்கத்தின் சார்பில் அதன் செயலாளர் தோழர் இரா. கீதா வாழ்த்துச் செய்தி அனுப்பியிருந்தார்கள்.

#### தீர்மானங்கள்

பூரண நிலச் சீர்திருத்தம் உரம் உடனடியாகக் கிடைக்க அரசை வற்புறுத்தல், நிலவெளியேற்றத்தை தடுத்து நிறுத்துதல், விவசாயத் தொழிலாளர்களுக்கு கூலி நிர்ணயம செய்தல், கட்டாயக் கடன் வசூலை நிறுத்துதல் முதலிய கோரிக்கைத் தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டன.

ரயில்வே, கோகோ—கோலா, தஞ்சை விவசாயத் தொழிலாளர்கள் போராட்டங்களுக்கும்,ஆதரவுத் தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டன.

வங்கம், கேரளம், கம்பம், அடக்குமுறைகளை கண்டித்தும், தி மு க ரவுடிகளால் தோழர் வி. பி. சிந்தன் தாக்கப்பட்ட தரமற்ற தறுதலைச் செயலைக் கண்டனம் செய்தும், மற்றும்பல தீர்மானங்களும் நிறைவேற்றப் பட்டன.

#### நிர்வாகிகள் தேர்வு

சங்கத்துக்குப் புதிய நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப் பட்டனர். தலைவராக பொதும்பு பி. இராமையாவும், உப தலைவராக மொக்கையனும் செயலாளராக கே. சுப்பையாவும், உதவிச் செயலாளராக ஆர். வெள்ளையும், பொருளாளராக பி கருப்பையாவும் 10 பேர் நிர்வாகக கமிட்டி உறுப்பினர்களாகவும்தேர்ந்தெடுக்கப்பட்டனர். மாவட்ட மாநாட்டிற்கு 25 பிரதிநிதிகளும், மாற்றுப் பிரதிநிதிகளும் ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

#### தலைவர்கள் உரை

மாநாட்டில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் மாநிலக் குழு உறுப்பினர் தோழர் என். வரதராஜன், மாவட்ட விவசாயச் சங்கச் செயலாளர் வி. ஏ. கருப்பசாமி ஆகியோர் உரை நிகழ்த்தினர்.

வரவேற்புக் குழுவின் செயலாளர் தோழர். கே. சுப்பாயா நன்றி கூற தலைவர் முடிவுரையுடன் மாநாடு இனிது முடிந்த.

நரசிங்கத்திலிருந்து சரியாக மாலை 6 மணிக்கு ஊர்வலம் புறப்பட்டது ஊர்வலத்தின் முன்னால் விவசாய இயக்க தலைவர்கள் செல்ல கிராம வாத்தியங்கள் முழங்க கலைநிகழ்ச்சியும், அதன் பின்னால் மாதர்கள் பெரும்படை, 'அடிமைகளல்ல நாங்கள், அரசியலில் எங்களுக்குப் பங்குண்டு' எனக் கூறுவது போல் வீரநடையிட்டு கொள்கைக்கோஷம் முழங்கிச் சென்ற 300 வீரங்கானைகளுக்குப் பின்னால்,பீடுநடையுடன் விவசாயிகளும் விவசாயத் தொழிலாளர்களும் பிரதிநிதித் தோழர்களும் சைக்கிளில்வந்த தொழிலாளர்களும், லாரியில்வந்த தோழர்களும் மாட்டுவண்டு வண்டிகளில் ஆர்பரித்து வந்த விவசாயிகளுமாக ஆயிரக்கணக்கானோர் பேர்களடங்கிய ஊர்வலம முக்கிய வீதிகள் வழியாக ஒத்தக்கடை பொதுக் கூட்டத்திடலை அடைந்தது.

#### பொதுக்கூட்டம்

அலைகடலென திரண்டிருந்த 5000மக்கள் அடங்கிய பொதுக்கூட்டத்தில ஆர். வெள்ளை தலைமை வகித்தார். மார்க்சிஸ்ட் கட்சி மாநிலக்குழுச் செயலாளர் ஏ பாலசுப்பிரமணியம் மாநிலக்குழு உறுப்பினர் என் வரதராஜன் 'தீக்கதிர்' துணையாசிரியர் ஐ. மாயாண்டிபாரதி, மாவட்ட விவசாய சங்கத் தலைவர் கே. பி. ஜானகியம்மாள், செயலாளர் வி. ஏ. கருப்பசாமி மாணவர் சங்க தலைவர் பாலதண்டாயுதபாணி ஆகியோர் உரை நிகழ்த்தினார்கள்.

#### ஏ. பி. வாழ்த்து

தோழர், ஏ, பாலசுப்பிரமணியம பேசும் பொழுது குறிபபிட்டதாவது;—

நிலப்பிரபுக்களால் நீசத்தனமாக குடிசைவாழ் உழைக்கும் மக்களின் 44 உயிர்கள் கொளுத்தப் பட்டன. தி மு க ஆட்சியாளர்கள் போட்ட வழக்கின் விளைவாக வைத்துக் கொழுத்திய கோமான்கள் விடுதலை செய்யப்பட்டார்கள். இது எவ்வளவு அக்கிரமம் பார்த்தீர்களா?

கிராமங்களில் ஒரு சிலர் உங்களிடையே வட்டிக்கு கொடுத்து உங்களையே வாட்டி வதைத்துக் கொண்டிருக்கின்றனர், அவர்களின் கிராம ஆதிக்கத்தை அடியுடன் அழிக்கும் கடமை உங்களுக்கு உணடு.

ஒன்றுபட்டுவரும் உழைக்கும வர்க்கம் மக்களை பிரிப்பதற்காக அரசியலை வர்த்தகமாக மாற்றிவரும் அரசியல் வர்த்தகர்களும்,முதலாளித்துவ அரசினரும் சாதி வெறியைத் தூண்டிவிடுகின்றனர். இதை முறியடிக்க வேண்டியது உங்களின் முக்கிய கடமை. உழைக்கும் வர்க்கம் ஒன்றுபட்டால்தான் பொருளாதாரத் தீர்வு காண முடியும் என்பதை நீங்கள் அறிய வேண்டும்.

இன்று நாடெங்கிலும் போராட்ட அலைகள் எழுந்திருக்கின்றன. மத்திய, மாநில அரசுகளின் மக்கள் விரோத— மாசுபடிந்த கொள்கைகளை நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும். சட்டங்கள் ஓட்டைச் சட்டங்களாக உள்ளன. 'உழுபவனுக்கு நிலமற்ற நிலை' மிகக் கொடியது. அந்த உரிமையைப் பெறுவதற்கு நீங்கள் ஒன்றுபட்டுப் போராட வேண்டும். போராட்டம் ஒன்றுதான் வாழ்வுக்கான வழி.

உழவர் பெருமக்களே உங்களின் உரிமைவேண்டி நீங்கள் ஒன்றுபட்டு நடத்துகின்ற போராட்டத்திற்கு மார்க்சிஸ்ட் கட்சி தயங்காது, தலைமை ஏற்கும் (பலத்த கைதட்டல் ஆரவாரம்)

தோழர்களே! வீரமுடன் செயலாற்றுங்கள்! விவசாய இயக்கத்தை விறுவிறுப்புடன் கட்டுங்கள்! நீங்கள் ஒன்றுபட்டு கோரிக்கைக்காக உரிமைக் கொடிதனைத் தூக்கி வீதிக்கு வர வேண்டும். அதுதான் இன்றைய பிரச்சினைகளைத் தீர்க்கும் ஒரே வழி

ஒன்றுபடுங்கள்! போராடுங்கள்! வெற்றி நமக்குத் தான்! என்றுகூறி உரையை முடித்தார்.

#### நன்றி உரை

வரவேற்பு கமிட்டிச் செயலாளர் கே. சுப்பையா அவர்கள் மாநாட்டிற்கு பொருளாதார, நிதியுதவி வழங்கிய பெருமக்களுக்கு நன்றி கூறினர். பொதுக் கூட்டத்தலைவர் வெள்ளையன் முடிவுரையுடன் கூட்டம் முடிந்தது,

#### இன்னிசை

பொதுக்கூட்டத்திற்குப் பின்னர் மதுரை தியாகி மனவாளன் குழுவினர் இன்னிசை நிகழ்ச்சியை பொது மக்கள் கடைசிவரை இருந்து ரசித்தனர்.

ஒத்தக்கடை வட்டாரத்தில் இம்மாநாடு விதசாயிகளுக்கும் விவசாயத் தொழிலாளர்களுக்கு புதிய உற்சாகத்தினை அளித்துள்ளது.

## தாழையூத்து சிமெண்ட் தொழிலாளர் தர்ணா

தாழையூத்து, ஆக. 11—

தாழையூத்தில் சிமெண்ட் தொழிலாளர்களின் கோரிக்கைகளை வற்புறுத்தி கடந்த 3-ந்தேதி 'தர்ணா' போராட்டம் நடைபெற்றது

அன்று காலை 8 மணியளவில் தழையூத்து சிமெண்ட் ஆலை முன்பு 'தர்ணா'வை தோழர் எஸ். பாலவிநாயகம் ஆரம்பித்து வைத்தார்,

தோழர்கள் முத்தையா- (ஒடும் ரயில்வே தொழிலாளர் சங்கம்) ராமர் பஞ்சாலை தொழிலாளர் சங்கம்) சண்முகம் (அ. தி. மு க). ஆகியோர் வாழ்த்திப் பேசினர். ஏராளமான சிமெண்ட் அன்ட் குவாரித்தொழிலாளர்கள் கலந்து கொண்டார்கள்.




## கடன் வழங்குவதில் தாமதம் ஏன்?

ஐயா.

அய்யம்பட்டி (வாழவந்தான கோட்டை)சிறுவிவசாயிகள் கூட்டுறவு நீரேற்று பாசன சங்கததிற்கு (ஆர். 1675) பதினாறு கிணறுகளுக்கு அரசாங்க அனுமதி விடைத்துவிட்டது, ஆனால் முதல் கட்டமாக, 7 கிணறுகளுக்கு கடன் வழங்க திருச்சி பிரதம நிலவளவங்கி சம்மதித்து, அதற்காக 29—2—73-ம் தேதி அன்று 7 பத்திரம் ரிஜிஸ்டர் செய்து வாங்கிக்கொண்டது. தேவையான ரிக்கார்டுகளும் தயார் செய்து கொடுத்தாகிவிட்டது இது திருச்சி தாலுகா விலேயே ஒரே சங்கமுமகூட.

ஆனல் இன்னமும் கடன் வழங்கவில்லை, காரணம் கேட்டால் அதிகாரிகளெல்லாம எங்கள் மீது தப்பு ஒன்றும் இல்லை. நாங்கள் செய்யவேண்டிய வேலையைச் செய்து முடித்து விட்டோம் என்று சொல்கிறார்கள். பிறகு ஏன் தாமதம் என்று பார்த்தால் இதில் யாரோ தி மு க காரர்கள் குறுக்கிட்டு கடன் வழங்கக்கூடாது என்று தடுத்திருப்பதாகத் தெரிகிறது; ஏன் என்றால் சிறு விவசாயிகள் எல்லாம் தி மு க, ஆக வேண்டுமாம். இந்தப்போக்கு, கூட்டுறவுத் துறையின் தன்மையையே குழி தோண்டிப் புதைக்கும் செயலாக சங்க உறுப்பினர் களுக்குத்தெரிகிறது.

எனவே எங்களுக்குகடன் கிடைக்க அரசும், அதிகாரிகளும் ஆவண செய்யுமாறு விரும்பிக் கேட்டுக்கொள் கிறேன்.

இப்படிக்கு,

பி. கமலதாசன்,
அய்யம்பட்டி
(வாழவந்தான் கோட்டை)
சிறு விவசாயிகள்
கூட்டுறவு
நீரேற்று பாசன சங்கம்,
திருச்சி 15,

## ஆரணி பட்டு நெசவாளர் போராட்டம் தொடர்கிறது நிதி உதவி செய்வீர்

ஆரணி, ஆக, 12—

வட ஆற்காடு மாவட்டம் ஆரணி நகரில் உள்ள 42 பட்டு மில்களில், இன்றுடன் 42 நாட்களாக கதவடைப்பு நீடிக்கிறது. இதனல் பாதிக்கப்பட்ட ஆயிரக்கணக்காண தொழிலாளர்கள் பெரும் இன்னல்களுக்கு ஆளாகியிருந்த போதிலும், கதவடைப்பை எதிர்த்து தொடர்ந்து போராடி வருகிறார்கள்.

### நிதி உதவி செய்வீர்

"கதவடைப்பை நீக்குக! கதவடைப்பு நாட்களுக்கு நஷ்ட ஈடு வேண்டும்! நிறுத்தப்பட்ட தொழிலாளர்களை வேலைக்கு எடுத்துக் கொள்ள வேண்டும்! சம்பள உயர்வு வேண்டும்!" —முதலிய கோரிக்கைகளை முன்வைத்து கடந்த 42நாட்களாக தொடர்ந்து போராடிவரும் ஆரணிபட்டு நெசவாளர்களுக்கு சகலவிதமான உதவிகளையும் நல்கும்படி, ஆரணிபட்டு நெசவாளர் தலைவர் கே. ஆர். சுந்தரம் வேண்டிக் கொண்டுள்ளார்.

உதவி நிதி அனுப்பி வைக்க தமிழகத் தொழிலாளர்களுக்கும், சங்கங்களுக்கும் தமிழக சி. ஐ, டி. யூ. சங்கங்களுக்கும் தமிழக சி. ஐ. டி. யூ. செயலாளர் தோழர் ஆர்.உமாநாத்வேண்டுகோள் விடுத்திருந்தார்.

### பேச்சு வார்த்தைக்கு முதலாளிகள் வரவில்லை

கடந்த 6ந் தேதியன்று, துணை லேபர் கமிசனர் முன்பு நடந்த பேச்சு வார்த்தைக்கு (கன்சிலேசன்) முதலாளிகள் வரவில்லை. மாறாக, தாங்கள் வராததற்கு காரணம் கூறும் வகையில் தந்தி அனுப்பிவிட்டார்கள்.

எனவே மறுபடியும் ஆக 14.ந்தேதிக்கு மறு வாய்தா போடப்பட்டுள்ளது.

## மின்சாரத் தொழிலாளர்களின் ஒற்றுமைக்கு வெற்றி

சென்னை, ஆக. 10—

தென்னாற்காடு திட்ட மின் தொழிலாளர்களிடையே தி. மு. க. சங்கத்தைச் சார்ந்த சில வன்முறையாளர்கள் தொடர்ந்து தொழிலாளர்கள் மையத்தில் பிளவையும் அதிருப்தியையும் ஊட்டி வருகின்றனர். ஆகஸ்ட் 4-ஆம் தேதி விழுப்புரத்தில் உள்ள தலைமை அலுவலகத்தில் வலதுசாரி சம்மேளன ஊழியர் சிலருக்கும் தி மு க முன்னேற்ற தொழிலாளர் சங்கத்தின் ஊழியர் சிலருக்கும் நோட்டீஸ் போர்டு சம்பந்தமாக சச்சரவு நடந்துள்ளது. இதில் தி மு க சங்க ஊழியர்கள் சிலர் வன்முறையில் ஈடுபட்டதாகவும் அதைத் தடுப்பதில் ஈடுபட்ட சம்மேளனத்தைச் சார்ந்த 4 பேர்கள் சஸ்பெண்ட் செய்யப்பட்டுள்ளனர். இதில் மின்துறை அமைச்சர் ஓ. பி. ராமன் நேரடியாகத் தலையிட்டதாகவும் கூறப்படுகிறது.

### மாரியம்மன் தேர் நின்றது

இந்த அக்கிரம சஸ்பென்டை எதிர்த்து முதலில் குறிஞ்சிப்பாடியில் உள்ள மின்சாரத் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்தனர். இதனல் தென்னாற்காடின்பெரும்பகுதிஇருளில் மூழ்கியது. அந்த ஊர் மாரியம்மன் தேர் ஓடாமல் நின்று விட்டது.

### அதிகாரி அசையவில்லை

இதனாலும் அந்தப் பகுதி உயர்மட்ட அதிகாரியான மேற்பார்வை பொறியாளர் அசையவில்லை. சஸ்பென்ட் உத்தரவு ரத்து செய்யப்படவில்லை. தென்னாற்காடு திட்டத்தில் மிகப் பெரும் பலம் வாய்ந்த சங்கமான மத்திய அமைப்பிலும் சி. ஐ டி. யு. விலும்இணைந்த தென்னாற்காடு திட்ட மின்சாரத் தொழிலாளர் சங்க நிர்வாகிகளை இரவு 10மணிக்குமேல் சம்மேளன நிர்வாகிகள் அணுகினர். இந்தப் பிரச்னையில் நியாயம் கிடைக்க ஒன்றுபட்டு போராடுவது ஒன்றே வழி என்று சி ஐ டி யூ சங்க நிர்வாகிகள் வலியுறுத்தினர். இதற்கு சம்மேளன நிர்வாகிகள் பரஸ்பரம் பொதுப்பணி பிரச்னையில் ஒன்றுபட்ட உறுதி கூறினர். அடுத்த நாள் ஞாயிற்றுக் கிழமை சி ஐ டி யூ சங்க நிர்வாகக் குழு கூட்டத்திலும் சம்மேளன நிர்வாகிகள் வந்து ஆதரவு கேட்டனர்.

### ஒன்றுபட்டனர்

அதன்பிறகு 4 தொழிலாளர்கள்மீது எடுக்கப்பட்ட அநீதியான நடவடிக்கையைக் கைவிடும் வரை போராடுவதென்றுகூட்டாக முடிவு செய்து எல்லா பகுதியிலும் உள்ள தொழிலாளர்களை இரண்டு சங்க நிர்வாகிகளும சேர்ந்துசென்று வேண்டுகோள் விட்டனர். இந்த ஒற்றுமையினால் உற்சாகமடைந்த தொழிலாளர்கள் 6-8-73 அன்று நூற்றுக்கு நூறு ஒன்றுபட்டு வேலை நிறுடதம் செய்தனர். சுமார் 3000 தொழிலாளர்கள் விழுப்புரம் மத்திய அலுவலகத்தில் கூடி ஆர்ப்பாட்டம் செய்தனர். இந்த ஒற்றுமைச் சக்திக்கு முன்னால்முன்னேற்ற சங்கம் இருக்கும் இடமே தெரியவில்லை.

### கலெக்டர் தலையிட்டார்

நிலைமை சூடு பிடிப்பதைக் கண்டு மாவட்ட கலெக்டரும், மின்வாரிய உயர் அதிகாரிகளும் சமரச முயற்சியில் இறங்கினர். சென்னை தொடர்பு கொண்டு தீர்வு காண முயற்சிததனர். மின்

(7-ம் பக்தி பார்க்க)

## இந்திய மாணவர் சங்கத் தோழர்கள் மீது சிண்டிகேட் வெறித் தாக்குதல்

நெல்லை, ஆக. 11—

சேவியர் கல்லூரி இந்திய மாணவர் சங்க உறுப்பினரான தோழர் ராஜாமுகமது, சிண்டிகேட் மாணவர்களின் வெறித் தாக்குதலுக்குள்ளாகி படுகாயம் அடைந்துள்ளார்.

சேவியர் கல்லூரி விடுதியில் சென்ற 8-ம் தேதி ஏதோ ஒரு மாணவர் தரக் குறைவாக மற்ற மாணவர்களைப் பேசிவிட்டார் என்பதில் எழுந்த தகராறை உபயோகிதது, அப்பிரச்சினையில் எந்த சம்பந்தமுமில்லாத இந்திய மாணவர் சங்க உறுப்பினர் பாஸ்கரை சிண்டிகேட் மாணவர்கள் தாக்க முயற்சித்தனர். இச்சம்பவம் சென்ற 9-ம் தேதி மாலை 3½ மணியளவில் நடந்தது.

இதைக் கண்டு சமாதானப்படுத்தச் சென்ற ராஜா முகமதுவை சிண்டிகேட் மாணவர்கள்சூழ்ந்துக் கொண்டு தாக்கினர். தோழர். ராஜா மூகமதுக்கு தலை, கை, கழுத்து ஆகிய இடங்களில் படு காயங்கள் ஏற்பட்டுள்ளன.

பிறகு இதே குண்டர்கள் பாஸ்கரை நெருங்கி, "எங்கள் பெயரை வெளியே சொன்னல் உன் தலையைக் கொண்டு சென்று விடுவோம்". என்று மிரட்டியுள்ளனர்.

### கண்டனம்

இந்திய மாணவர் சங்க வளர்ச்சியால் பொறுமை கொண்டு, தாக்குதலில் இறங்கியிருக்கும் சிண்டிகேட் மாணவர்களை இந்திய மாணவர் சங்க நெல்லை மாவட்டக்குழு வன்மையாகக் கண்டித்துள்ளது.

(8-ம் பக்தி தொடர்ச்சி)

வாரிய உயர் அதிகாரி சென்னையில் கொடுத்த வாக்குறுதியின் பேரில் அன்றையப்போராட்டம் தள்ளி வைக்கப்பட்டது,

### ஒற்றுமைக்கு வெற்றி

அடுத்தநாள் சி ஐ டி யூ சங்க பொதுச் செயலாளர் தோழர் கே ஜானகி விமனும், சம்மேளன நிர்வாகிகளும் கூட்டாக போர்டுஅதிகாரியுடன் பேசி அந்த 4 பேர்கள் மீது எடுக்கப்பட்ட சஸ்பெண்ட் உள்பட சகல நடவடிக்கைகளையும் ரத்து செய்ய வைததுள்ளனர். ஒற்றுமை வெற்றி கண்டது.

### ஒன்றுபடுவோம்

அங்கீகரிக்கப்பட்ட சம்மேளனம் தன்னந்தனியாக ஆகஸ்ட் 4-ல் போராடி சாதிக்காததை மத்திய அமைப்பும் சம்மேளனமும் இணைந்து ஆகஸ்ட் 6-ல் போராடியபோது வெற்றி காண முடிந்ததென்று தென்னாற்காடு தொழிலாளர்கள் உற்சாகமடைந்துள்ளனர். எப்படியும் பொதுப் பிரச்னைகளில் ஒன்றுபட்டு நிற்பதென்றும் சபதமேற்றுள்ளனர்.

# இன்றைய பொருளாதார - அரசியல் நிலைமை

**(1973 ஜூலை 15 முதல் 20 வரை கல்கத்தாவில் கூடிய இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) யின் மத்தியக் குழுக் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்ட அறிக்கை)**

[தொடர்ச்சி—5]

காங்கிரஸ் எம். எல். ஏ. ஒருவர் சட்டசபையில் வெளிப்படையாக கூறினர்: "பெல்காரியா பகுதியானது ரௌடிகளின் சொர்க்கமாக ஆகிவிட்டது. அங்கே ரௌடிகள் குண்டுகளுடனும், குழல் துப்பாக்கிகளுடனும், பட்டப்பகலில் சுதந்திரமாக திரிந்து கொண்டிருக்கின்றனர். தாக்கப்பட்டு விடுவோம் என்ற பயத்தினுல், தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் அப்பகுதிக்குள் நுழைய முடியவில்லை. காங்கிரஸ் ஊழியர்கள் என்ற பெயரில் காலிகள் நடமாடி வருகின்றனர். அவர்கள் உண்மையான காங்கிரஸ்காரர்களைத் தாக்குகின்றனர்" மாவட்ட காங்கிரஸ் கமிட்டி அலுவலகமொன்று போட்டிக் கோஷ்டியினரால் கைப்பற்றப்பட்டது; போலீசார் அங்கு வந்தபோது அவர்கள் குழல்துப்பாக்கிகளையும், பிற ஆயுதங்களையும் சந்திக்க வேண்டியதாயிற்று.

## கோளத்தில் உட்கட்சிச் சண்டை

கேரளத்திலும்கூட உட்கட்சிச் சண்டை நடந்து கொடிண்ருக்கிறது; ஒரு கோஷ்டி, சட்சியின் கொள்கைகளைப் பாதுகாப்பதாக காட்டிக் கொள்கிறது. கேரளத்திலுள்ள காங்கிரஸ் கட்சி, எவ்வித சுய—கௌரவமுமின்றி முஸ்லீம் லீகின் பயமுறுத்தல்களுக்கு அடிபணிந்துவிட்டது. அங்கு கல்வியமைச்சராக இருக்கும் முஸ்லீம் லீக் அமைச்சர்,வருகின்ற ஆண்டிலிருந்து பள்ளிக்கூடங்களில் நேருவின் வாழ்க்கை வரலாறு பாட புத்தகமாக இருக்கக்கூடாது என்று உத்திரவிட்டுள்ளார். பழைய பிற்போக்கு முஸ்லீம் லீக் பற்றி நியாயமற்ற விமர்சனங்கள் அப்புத்தகத்தில் இருப்பதாக காரணம் காட்டப்படுள்ளது. தற்போதுள்ள பாட புத்தகத்தில் எதிர்க்கப்படுகின்ற பகுதிகளை மட்டும் நீக்கி விட்டு அப்புத்தகத்தை தொடர்ந்து பயன்படுத்த காங்கிரஸ்—வலது கம்யூனிஸ்ட் கட்சி கூட்டு அமைச்சரவை ஒத்துக் கொண்டிருக்கிறது. அப்புத்தகங்களை வாபஸ் பெறுவது பற்றிய பிரச்சினையில் இறுதி முடிவு எடுப்பதை பின்வரும் காலத்திற்கு தள்ளி வைத்துள்ளனர். தலைமையில் ஒரு பகுதியும், இளைஞர்களும், தங்கள் உட்கட்சி சண்டைகளின் போது, முஸ்லீம் லீகைக் கண்டனம் செய்வதோடு, சமரசம் செய்த தங்கள் கட்சியினரையும், தங்கள் அமைச்சர்களையும் தாக்கிப் பேசிவருகின்றனர்.

கடந்த பம்பாய் கார்ப்பரேஷன் தேர்தலில் காங்கிரஸ் படுதோல்வியுற்றதற்குக் காரணம், அமைச்சர்களும், மஹாராஷ்டிர மாநில காங்கிரஸ் தலைவர்களும் சிவ சேனையுடன் கூடிக் குழாவியது தான். கடந்த வாரம், திருமதி இந்திரா காந்தி பம்பாய்க்குச் சென்றிருந்தபோது, மூன்று அமைச்சர்களும், மஹாராஷ்டிர காங்கிரஸ் தலைவர்களும் வெளிப்படையாக குற்றம் சாட்டப்பட்டனர். அம்மூன்று அமைச்சர்களும் வெளியேற்றப்படவேண்டும் என்று கோரப்பட்டது.

## இனவெறியர்களோடு கூடிக்குலாவல்

இத்தகைய பொருளாதாரப் பின்னணியிலும் மக்களின் சினம் வளர்ந்து வருகின்ற பினனணியிலும் ஆளும் கடசியின் நிலைமை இப்படி இருக்கிறது. ஆளும் கட்சி தன் பெயரைக் காப்பாற்றிக் கொள்ள முடியாததுமட்டுமல்ல, பல மாநிலங்களில் ஒரு ஸ்திரமான அமைச்சரவையை தொடர்ந்து நடத்த முடியவுமில்லை. இப்பலவீனத்தோடுகூட முன்பு மக்கள் மத்தியில் தனக்கு இருந்த பிடிப்பு தளர்ந்து வருகிறது என்பதை உணர்ந்து கொண்டு, முஸலீம் லீக் பிற்போக்குத் தலைவர்களை தாஜா செய்வதன் மூலம் முஸ்லீம்களின் ஆதரவைப் பெற முயன்று, அதன் வாயிலாக, முஸ்லீம் லீக் தலைவர்களின் பயமுறுத்தல்களுக்கு தன்னை ஆளாக்கிக் கொண்டிருக்கிறது.

சிறுபான்மையினரின் நியாயமான கோரிக்கைகளுக்கு இணங்கி, அவர்களது நன்மைகளுக்குப் போராடி, அதன் மூலம் சிறுபான்மையினரின் ஆதரவைப் பெற்று, தன் நியாயத்தை நிலைநிறுத்த முடியாமல், முஸ்லிம் இனவெறியை எதிர்த்துப் போராட முடியாமல், சிறுபான்மை மக்களுக்கு எதிராக தன்னிடமுள்ள பாரபட்சமான போக்கை மாற்ற முடியாமல், ஆளும் கட்சியானது முஸ்லிம் வாக்காளர்களின் ஆதரவைப் பெறுவதற்கு பிற்போக்குத்தனமான முறைகளையே நம்பி இருக்கிறது. அதற்கு வேண்டியதெல்லாம் முஸ்லிம் வாக்காளர்களின் ஓட்டுகள் மட்டுமே; அவ்வோட்டுகளைப் பெறுவதற்காக, முஸ்லிம் லீக் தலைவர்களின் பிற்போக்குத்தனமான விருப்பு வெறுப்புக்களை பாதுகாக்க ஆளும் கட்சி தயாராக இருக்கிறது.

சமீப காலத்தில் பிற திசை திருப்பும் சக்திகளும் இனவெறி வாத சக்திகளும் தங்கள் சீர்குலைவு நடவடிக்கைகளைத் தீவிரப் படுத்தியுள்ளன. இந்து இனவெறி வாதம், பிராந்திய வெறி, மாநில வெறி, ஜாதி, ஸ்தல மக்களுக்கே வேலை வாய்ப்பு என்ற சீர்குலைவு முழக்கம், மொழிவாரி மாநிலங்களை சீர்குலைக்க, ஆந்திராவில் பிரிவினைவாதிகள் கோருவது போன்ற பிரிவினை வேலைகள், அஸ்ஸாமில் இருப்பது போன்று சிறுபான்மைமையினருக்கு எதிரான இனவெறி ஆகியவை எல்லாம்- ஜனநாயக இயக்கங்கள் மீதும், தொழிலாளி வர்க்க இயக்கங்கள் மீதும தொடுக்கபபட்டுள்ள திசை திருப்புகின்ற புதிய தாக்குதல்களாகும். நாட்டின் ஒற்றுமையையும், ஜனநாயக இயக்கங்களின் ஒற்றுமையையும் சீர்குலைப்பதற்காக ஏகாதிபத்திய ஏஜண்டுகள் இவற்றைத் தவருமல் பயன்படுத்துவதால் இது மேலும் ஆபத்தானதாகிறது.

## வங்க இடதுசாரிக் கட்சிகளின் ஒற்றுமை

மேற்கு வங்காளத்தில், பெரும் இடையூறுகள், தொடர்ச்சியான அடக்குமுறை, பயமுறுத்தல் ஆகியவற்றுக்கிடையே, அவ்வப்போது சில கருதது வேறுபாடுகள் எழுந்த போதிலும், இடதுசாரிக் கட்சிகளிடையே—இந்திய கம்யூனிஸ்ட கட்சி (மார்க்சிஸ்ட்). புரட்சி சோஷலிஸ்ட் கட்சி, சோஷலிஸ்ட் யூனிட்டி சென்டர், பார்வர்டு பிளாக், பார்வர்டு பிளாக் (மார்க்சிஸட), பிப்லவ பங்களா காங்கிரஸ், புரட்சி கம்யூனிஸ்ட் கட்சி ஆகிய கட்சிகளுக்கிடையே பொதுவான கருத்தொற்றுமை இருந்து வருகிறது. இந்த கருத்தொற்றுமையானது, ஒன்றுபட்ட நடவடிக்கைகளில்—பொதுக்கூட்டங்கள், ஆர்ப்பாட்டங்கள், எதிர்ப்பு வேலைநிறுத்தங்கள் ஆகியவற்றில்—வெளிப்படுகிறது. இந்த ஒன்றுபட்ட நடவடிக்கைகள் மக்களின் பெருகிவரும் ஆதரவைப் பெற்று வருகின்றன.

## வலது கம்யூனிஸ்ட் கட்சி

வலது கம்யூனிஸ்ட் கட்சியானது, வலதுசாரிகளுக்கு எதிராக போராடுவதாகப் பாசாங்கு செய்த போதிலும், இந்திராகாந்தியின விளையாட்டான இடதுசாரிசக்திகளைசீர்குலைக்கின்றவிளையாட்டையே அது விளையாண்டு வருகிறது என்று நமது கட்சி சரியாகவே குற்றம் சாட்டியது. ஜனசங்கம் போன்ற வலதுசாரி சக்திகள் சுதந்திரமாக இயங்குகின்ற அதேநேரத்தில், உண்மையான இடதுசாரி சக்திகள்—முக்கியமாக நமது கட்சி ஒடுக்கப்படுவதற்கு காரணம், வலது கம்யூனிஸ்ட்களின் இந்த நடவடிக்கையும் ஆளும் கட்சிக்கு அது அளிக்கும ஆதரவுமேயாகும்.

இடதுசாரி சக்திகள், மற்றும் ஜனநாயக சக்திகளின் ஐக்கிய முன்னணி என்ற நமது முழக்கத்திற்கு எதிராக, வலது கம்யூனிஸ்ட் கட்சி வைத்துள்ள, காங்கிரசுடன் கூட்டு உழைப்பு என்ற முழக்கமானது ஜனநாயக இயக்கத்திற்கு மிகப் பெரும் துன்பத்தை தந்துள்ளது. வலது கம்யூனிஸ்டுகளின் கொள்கையானது, இடதுசாரி சக்திகளை சீர்குலைக்கின்ற மிகப்பெரும் மூலாதாரமாக இருந்து வருகிறது.

பொருளாதார நிலைமையும், அடக்குமுறையும், தனது தேர்தல் வாக்குறுதி எதையும் நிறைவேற்ற முடியாத காங்கிரசின் கையாலாகாத்தனமும் மக்களின் கண்களைத் திறந்து வருகின்றன; இடதுசாரி சக்திகள், ஜனநாயக சக்திகள் ஆகியவற்றின் ஐக்கிய முன்னணியைக் கட்டுவதற்கு மிகவும் சாதகமான சூழ்நிலை உருவாகி வருகிறது. காங்கிரசுடன் கூட்டு உழைப்பு என்ற வலது கம்யூனிஸ்டுகளின் சீர்குலைவு முழக்கத்தை, வாழ்க்கை அனுபவமானது மறுத்து உதறித் தள்ளி வருகிறது.

## வலதுகளின் போலி நாடகம்

இந்த நிகழ்ச்சிகள், வலது கம்யூனிஸ்ட் முகாமிற்குள் எதிர் விளைவுகளை ஏற்படுத்தி வருகின்றன. ஆளும் கட்சியுடன் இணைந்து இருப்பது, அதே நேரத்தில் காங்கிரஸ் கொள்கைகளுக்கு எதிராக நடவடிக்கை எடுக்க வேண்டுவது என்ற இரண்டும் கெட்டான் நிலையை வலது கம்யூனிஸ்ட் தலைமை பின் பற்றி வருகிறது. ஏகபோகவாதிகளையும், பதுக்கல்காரர்களையும் மட்டும் தாக்குவது, ஆளும் கட்சியையும் அதன் அரசாங்கத்தையும் நல்லவையாக சித்தரிப்பது என்ற பழைய முழக்கம் இனியும் செல்லுபடியாகாது.

கட்சி அணிகளின் பொறுமை இன்மையும், மக்களின் உணர்வுகளது எழுச்சியும், வெகுஜன நடவடிக்கைகளுக்கு அறைகூவல் விடுக்கும்படி பல சமயங்களில் செய்துள்ளது. கட்சியின் கீழ் மட்ட அணிகளில, பல சமயங்களில், ஒன்றுபட்ட நடவடிக்கைகளுக்கான பெரும் ஆர்வம் காணப்படுகிறது. அக்கட்சியின் தொழிற்சங்கம் பெங்களூர் பந்துக்கு அறைகூவல் விடுத்ததோடு அதில் கலந்து கொள்ளுமாறு நமக்கு அழைப்பும் விடுத்துள்ளது. பம்பாயில் மே 15ந் தேதி வேலைநிறுத்தத்தில் அது நம்மோடு சேர்ந்து கொண்டது. பிற கட்சிகள் சிலவற்றின் ஆதரவோடு பீகார் 'பந்த்' க்கும் ஏற்பாடு செய்தது. இப்போது ஜூலை 27-ல் மேற்கு வங்காள பந்த் நடத்துமாறு அறைகூவல் விடுத்துள்ளது. இதில், தங்களுக்கு உதவுமாறு காங்கிரஸ் கட்சியைக் கேட்டுக் கொண்டுள்ளது; நம்முடனே, பிற இடதுசாரி கட்சிகளுடனே பேச அது மறுத்து விட்டது. மேற்கு வங்காளத்தில்—நமதுகட்சி, நான்கு இடதுசாரி கட்சிகள், சி ஐ டி யூ ஆகியவற்ருேடு சேர்ந்து, அதே நாளில் பந்த் ஒன்றுக்கு அறைகூவல் விடுத்துள்ளது. காங்கிரஸ் அரசாங்கம் இதை எதிர்க்கிறது.

காங்கிரசுக்கு ஆதரவு, காங்கிரசோடு கூட்டுறவு என்ற அதன் முந்திய கொள்கைகள் ஆகியவற்றை வளர்ந்து வரும சூழ்நிலையின் நிர்ப்பந்தங்கள் தலைகீழாக மாற்றி வருகின்றன.

## காங்கிரஸ் எதிர்ப்பு முன்னணி

அதே நேரத்தில், யதார்த்த நிலைமைகள் மிகக் குறைந்த அளவே கவனம் செலுத்தப்படுகின்றன. கடைசியாக நிறைவேற்றப் பட்ட அவர்களது, தீர்மானம் "விலைவாசி உயர்வுபோன்றமிக அவசரமான வெகுஜனப் பிரச்சினைகளில், கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) போன்ற இடதுசாரிக் சட்சிகளுடன் கூட்டு நடவடிக்கை" என்பது பற்றி மட்டுமே கூறுகிறது மிக விரிவான ஒற்றுமைக்கு உதாரணமாக மேற்கு வங்க சனல் தொழிலாளர் வேலை நிறுத்தத்தை ஒப்புதலுடன் குறிப்பிடுகிறது. ' உணவு தானிய மொத்த வர்த்தகத்தை அரசு ஏற்று நடத்துவது என்ற கொள்கைக்கு ஆதரவான, பொதுவான அடிப் படையில் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) யின்பால் நமது அணுகு முறை இருக்கும; **ஒரு காங்கிரஸ் எதிர்ப்பு அரசியல் முன்னணியை உருவாக்க வேண்டும் என்ற கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) யின் செக்டேரியன் நிலைமைக்கு ஆதரவு தேடுவதற்கு, ஒன்றுபட்ட நடவடிக்கைக்கான மேடையை அவர்கள் பயன்படுத்த விடாமல் செய்வதை** உத்திரவாதம் செய்யும் வகையில நமது அணுகுமுறையும் அமையும்" அதிக பட்சம் போனஸ், பொருளாதாரப் பிரச்சினைகளுக்காக ஒன்றுபட்ட நடவடிக்கை; ஆனுல், இடதுசாரி, ஜனநாயக முன்னணிக்கு ஆதரவு கிடையாது காங்கிரசுடன் கொண்டிருக்கும் உறவு தொடர்ந்து இருக்க வேண்டும்—இதுதான் முக்கியமான நிபந்தனை. இடதுசாரிக் கடசிகளுடன் ஒன்றுபட்ட நடவடிக்கைகளில் ஈடுபடுவதானது இந்த உறவைப் பாதிக்கக் கூடாது; பொருளாதார ரீதியான எதிர்ப்புகள இருந்து விட்டுப் போகட்டும்; ஆனுல் அவை அடிப்படையான அரசியல் ஒத்துழைப்பு நட்பை பாதித்துவிடக் கூடாது—வலது கம்யூனிஸ்ட்களின் கோரிக்கை இத்தகையதாக இருக்கிறது.

ஏன் இத்தகைய கொள்கை? அவர்களது தற்போதைய அரசியல் கொள்கைக்கு காங்கிரசுடன் நேச உறவு என்பது அடிப்படையாக இருக்கிறது. இத்தகைய கொள்கையின் மூலமாகத்தான் அமைச்சரவை ஒன்று இருப்பதாக அவர்கள் தற்பெருமையடித்துக் கொள்ள முடியும்; தங்களது அணிகளை மயக்குவதற்கு அவர்களிடமுள்ள துருப்புச் சீட்டு அந்த அமைச்சரவைதான்.

## சொல்லும் செயலும்

பொருளாதாரப் பிரச்சினைகள் அடிப்படையில், ஒன்றுபட்ட நடவடிக்கைகளில் ஈடுபடவேண்டும் என்று வலது கம்யூனிஸ்ட் தலைவர்கள் ஆலோசனை கூறுகின்றனர்—இது வரவேற்கத தகுந்த ஒரு நடவடிக்கையாகும். ஆனுல் அதே நேரத்தில் பொது மக்களின போராட்டங்களை மிருகத்தனமாக ஒடுக்குவதற்கு கேரளாவில் தங்களால் முடிந்ததை எல்லாம் அவர்கள் செய்கிருர்கள். கேரள என். ஜி. ஓ க்கள் போராட்டத்தின் போதும், மாணவர்கள் மற்றும் விவசாயத் தொழிலாளர்கள் போராட்டத்தின் போதும், வலது கம்யூனிஸ்ட் தலைவர் தலைமை தாங்குகின்ற கேரள கூட்டு அமைச்சரவை, இதுவரை கேட்டிராத அடக்கு முறைகளையும், மிருகத்தனமான தாககுதல்களையும் கட்டவிழ்த்து விட்டுள்ளது. கேரளத்தில் ஒரு சட்டிக் கூழுக்காக அவர்கள், இயக்கத்திற்கு எதிராக எத்தகைய கொலைபாதகங்களையும் செய்யத் தயாராக இருப்பதாகத் தெரிகிறது. விலைவாசி உயர்விற்கு எதிரான அதிருப்தி, உணவு பற்ருக்குறை, வேலை இல்லாத் திண்டாட்டம், ஆகியவற்றுக்கு எதிரான அதிருப்தி ஆகியவற்றை அடக்கி ஒடுக்குவதற்கு, வலது கம்யூனிஸ்ட் அமைச்சர்கள் மிக மிகக் கடுமையான முறையில் அளிதது வரும் உதவிகள், பிற மாநிலங்களில் உள்ள பல அமைச்சர்களை நாணச் செய்து விடும்.

இவை எல்லாவற்றுக்கும் நடுவே, பழைய முழக்கங்களும்' பழைய நடைமுறை தந்திரங்களும மேலும் மேலும் பயனற்றதாகி வருகின்றன. அவர்கள் காங்கிரசுடன் கொண்டுள்ள உறவை தொடர்ந்து பாதுகாப்பதற்குக் கூட, சில ஒன்றுபட்ட வெகுஜன நடவடிக்கைகளை நடத்தியாக வேண்டிய நிலை உள்ளது.

வெகுஜன, ஒன்றுபட்ட நடவடிக்கைகளுக்காக நமது கட்சி மேற்கொள்ளும் முயற்சிகளை இரட்டிப்பாக்க வேண்டிய சிறப்பான சூழ்நிலை இது; வலது கம்யூனிஸ்ட தலைவர்களின் கேந்திரமான அரசியல் முழக்கமானது எந்த அளவிற்கு வெற்றுத் தன்மையுடையது என்பதையும், இடதுசாரி சக்திகள், ஜனநாயக சக்திகள் ஆகியவற்றின் ஐக்கிய முனனணி என்ற நமது முழக்கம் எவ்வாறு யதார்த்தநிலைமைகளுக்குப் பொறுத்தமாக இருக்கிறது என்பதையும் மக்கள்காணும்படி செய்வதற்கு கட்சி தனது முயற்சிகளை இரட்டிப்பாக்க வேண்டும்.

## சோஷலிஸ்ட் கட்சி

இரண்டு வாரங்களுக்கு முன்னால், பெங்களுரில் நடந்த சோஷலிஸ்ட் கட்சியின் கூட்டத்தில் ஒரு தஸ்தாவேஜு ஏற்றுக் கொள்ளப் பட்டது.

நம்மோடு பேசவும், கூட்டாகச் செயல்படவும், வழிவகுப்பதாக, இதனை நம்மோடு இணைந்து செயல்பட விரும்புபவர்கள் கூறுகிருர்கள். இடதுசாரி ஜனநாயக அணிகளைத் திரட்டுவது பற்றியோ பிற்போக்குக் கட்சிகளுடனுள்ள கூட்டைத் தவிர்ப்பது பற்றியோ, இதில் ஏதும் கூறப்படவில்லை. குறிப்பிட்ட பிரச்சினைகளில் பயன்தரும் முறையில நடவடிக்கைகள் எடுக்க, மற்ற கட்சிகளுடன் ஒத்துழைக்க தான் தயாராக இருப்பதாக சோசலிஸ்ட் கட்சி அறிவிக்கிறது. முற்போக்கான எண்ணங்கொண்ட வெகுஜன ஸ்தாபனங்களோடு சேர்ந்து செயல்பட இருப்பதாகத் தெரிகிறது.

இருந்தாலும், தொழிற்சங்க ஐக்கிய கவுன்சிலோடு சேர்ந்து செயல்பட்டு, வெகுஜன நடவடிக்கைக்கு உதவ, சோசலிஸ்ட் கட்சியின் சில தலைவர்கள் விரும்புகிருர்கள் என்பது உண்மை.

ஒன்றுபட்ட நடவடிக்கைக்கும், மக்கள் இயக்கத்திற்கும், இது அடிகோலுமானுல், நமது போராட்டத்திற்கு இது ஒரு உந்துதலாக இருக்கும்.

சோசலிஸ்ட் கட்சியின் தலைமை, திடீரென்று ஊசலாடாது, அல்லது மாருது என்று நினைப்பது தவருகும். கம்யூனிஸ்டுகளைத் தவிர்ப்பதில் கவனம் செலுத்தி, கிருபாளனி கூட்டும் எதிர்க்கட்சிகள் மாநாட்டில் சோசலிஸ்ட் கட்சி பங்கு பெறும் என்று கூறப்படுகிறது. உத்திரப்பிரதேசத்தில் இருக்கும் சோசலிஸ்ட் கட்சியின் தலைவர்கள் சிலர், சில பிரச்சனைகளில், மந்திரிகளின் ஒத்துழைப்பை நாடுவதாக பத்திரிகைச் செய்திகள் கூறுகின்றன.

## வலதுசாரி சக்திகள் தம் ஆதாயத்துக்கு பயன்படுத்திக் கொள்ளல்

வலதுசாரி பிற்போக்கு கட்சிகள், வெகுஜன அதிருப்தியை தாங்கள் பிரதிநிதித்துவப் படுத்துவதாக காட்டிக் கொண்டு சூழ்நிலையை தங்களுக்கு அனுகூலமாக மாற்றிக் கொள்ள இடைவிடாது முயற்சித்துக் கொண்டுவருகின்றன. அநேக மாநிலங்களில் ஜனசங்கத்தின் நடவடிக்கைகள் பரந்த அளவில் விஸ்தரிக்கப்பட்டு இருக்கின்றன என்பதை ஏற்கனவே குறிப்பிட்டுள்ளோம். இப்போது, ஜனசங்கம் தொழிற்சங்க போராட்டங்களிலும்—குறிப்பாக, அரசு ஊழியர் போராட்டங்களிலும் தலையிட ஆரமபித்துள்ளது. சந்தர்ப்பங்களை பயன்படுத்தி சாகசம்புரியமுடியாத காரணத்தால், சுதந்திரா கட்சியும், ஸ்தாபன காங்கிரசும் முன்னேற முடியவில்லை. இது ஸ்தாபனக் காங்கிரசின் கயா மாநாட்டில் வெளிப்படுத்தப்படடது. ஆயினும் நிலப்பிரபுக்களையும்பெரும் வர்த்தகர்களையும்— ஏகபோகங்களையும், மற்றும் இதுபோன்ற சுயநலக் கூட்டங்களையும் பாதுகாத்துக் கொண்டிருக்கும்ஜனசங்கமானது,அதேசமயத்தில், நமது நாட்டின் ஜீவாதாரமான பாத்திரம் வகிக்கும் சிறு உடமையாளர்களான குட்டிப பூர்ஷ்வா மக்கள் பகுதிகளை தன்பக்கம் கவர்ச்சித்துக் கொண்டும் இருக்கிறது. அரசாங்க கட்டுப்பாடுகளை பற்றியும் வர்த்தகத்தை அரசாங்கம் எடுத்துக் கொள்வதைப் பற்றியும் சில்லறை வியாபாரிகளுக்கும் சிறிய, நடுத்தர விவசாயிகளுக்கும் ஏற்பட்டிருக்கிற உண்மையானதும் கற்பனையானதுமான அச்சங்களை ஜனசங்கம் பயன்படுத்திக் கொள்கிறது,

நாட்டு மக்கள் மத்தியில் வறுமை தாண்டவமாடுவதாலும் அவர்களுடைய உணர்வு தீவிரமாகி வருவதாலும் பிற்போக்கு கட்சிகளது செல்வாக்கின் அடிப்படை சுருங்கிக் கொண்டே வருகிறது. நாட்டின் பெரும்பாகங்களில் வளர்ந்து வரும் போராட்டங்களில் இடதுசாரி சக்திகள் தலையிட முடியாத அளவுக்கு பலவீனமாக இருக்கிறது அதன் காரணமாக, வலதுசாரி சக்திகள், இன்றும் கூட, மக்களின் அதிருப்தியை தங்களுக்குச் சாதகமாக பயன்படுத்திக் கொள்ளும் அபாயம் எழுகிறது.

ஆதலால்,இந்தக்கட்சிகளினுல் ஏற்படும் அபாயத்தை குறைத்து மதிப்பிடக்கூடாது. அந்தக்கட்சிகளுக்கு நிறையப்பணம் கொடுக்கப்படுகிறது அக்கட்சிகள்தாம் தகுதியான எதிர்க்கட்சிக்கான அந்தஸ்துள்ளவை என பூர்ஷ்வா பத்திரிகைகள் புகழ் பாடுகின்றன.

அதனுல், அக்கட்சிகள் தங்களைப்பற்றி பிரமாதமாக உருவகப் படுத்திக்கொள்வதற்கு, இப்பெரும் பிரச்சாரங்கள் உதவுகின்றன. இந்தக் சட்சிகளின் மூலம் சி. ஐ. ஏ. உளவு ஸ்தாபனமும், அமெரிக்கத் தொடர்புகளும் வேலை செய்கின்றன. இவற்றிற்கு எதிராக, அரசாங்கமும், ஆளும் கட்சியும் வெத்துவேட்டு இடிமுழக்கம் செய்தாலும், உண்மையில் அரசாங்கத்தின் பகையும் அடக்குமுறையும, நமக்கும் இடதுசாரி சக்திகளுக்கும் எதிராகவே பாய்ச்சப்படுகிறது. இவ்வாறு, ஜனநாயக சக்திகளை பலவீனப்படுத்துகிருர்கள். வலதுசாரிக் கட்சிகளின் முன்னேற்றத்திற்கு வழி வகுத்து தருகிருர்கள்.

## அடக்குமுறைகள் அதிகரிக்கப்பட்டுள்ளன

அரசாங்கம், வலதுசாரி சக்திகளை அவைகளின் சுதந்திரப் போக்கில் விட்டுவிடுகிறது. அதே நேரத்தில் வெகுஜன ஸ்தாபனங்களுக்கும் நமது கட்சிக்கும் எதிராக காட்டுத்தனமாக அடக்கு முறைகளை ஏவுகின்றது. கடந்த சில மாதங்களில், போராடும் மக்களுக்கு எதிராக என்றும் கேட்டிராத அடக்குமுறைக் குற்றங்களைச் செய்துள்ளன. துப்பாக்கிச் சூடுகளும், குண்டர் கூட்டங்கள் அவித்துவிட்ட தாக்குதல்களும், மத்திய ரிசர்வ் போலீசின் தாக்குதல்களும், பாதுகாபபுச்சட்டத்தின் கீழ் வேலை நிறுத்த தடைகளும், அத்தியாவசிய சர்வீஸ் பராமரிப்புச்சட்டங்களின் கீழ் கைதுகளும் வெகுஜன இயக்கங்களை நசுக்குவதற்கு பயன்படுத்தப்பட்டன. மேற்கு வங்கத்தில், நமது தொழிலாளர்களின் மீது குண்டர்களின் தாக்குதல்கள் தொடருகின்றன. எவ்வித தடங்களும் தடையும் இன்றி தொழிற்சங்கத்தலைவர்கள் மீது கொலைகாரத் தாக்குதல்கள் தொடர்கின்றன. ஆயிரக்கணக்கானேர் இன்றைக்கும் சிறைகளில் பூட்டப்பட்டு கிடக்கின்றனர்.

## போராடும் மக்களுக்கெதிரான அவசரச்சட்டம்

இத்துடன் திருப்தியடையாமல், ஆட்சி பீடத்தில் உள்ளவர்கள், புதிய இந்திய குற்ற தண்டனை மசோதா, தொழில் உறவு மசோதா, ஆகிய அடக்குமுறை ஆயுதங்களை தயாரித்து வருகிருர்கள். மேற்கூறிய குற்ற தண்டனை மசோதா என்பது இன்றுள்ள குற்ற தண்டனை மசோதாவை ஒரு பயங்கர பேய்ச்சட்டமாகச் செய்யும் முயற்சியாகும்.

கேரளத்தில், அத்தியாவசிய சேவைச் சட்டம் விவசாயத் தொழிலாளர்களுக்கு எதிராக பயன்படுத்தப்படுகிறது. உத்திரப்பிரதேசத்தில், ஒரு புதிய அவசரச் சட்டம் கொண்டுவரப்பட்டுள்ளது இந்தச் சட்டம் எந்தக் காரணமும் காட்டாமலே வேலையிலிருந்து நீக்க வகை செய்கிறது.

ஆனுல், மககளுடைய அதிருப்தி, கட்டுக் கடங்காமல் தொடர்ந்து வளரத்தான் செய்கிறது. கிளர்ச்சி செய்யவேண்டும், நடவடிக்கை எடுக்க வேண்டும் என்ற மாத்திரத்திலேயே, இதுவரை ஈடுபடாத பகுதியினரும் பங்கு கொள்ளும் விதத்தில் மக்களிடையே அதிருப்தி அவ்வளவு தீவிரமாகியுள்ளது. உத்திரப்பிரதேசத்தில் ஆயுதப் போலீசார், ஆயுதம் தாங்கிப் போராட முன்வந்த நிகழ்ச்சி இந்த அதிருப்தி நிலையின் மிக உயர்ந்த கட்டமாகும். தனிப்பட்டதொரு நிகழ்ச்சிதான் இது. விரிவான ஜனப்பகுதிகளுடன் சம்பந்தப்படாத ஒரு பிரச்சினைதான் இது. எனினும், தங்கள் மீது சுமத்தப்பட்டுள்ள படுகேவலமான நிலப்பிரபுத்துவ விதிமுறைகளுக்கு எதிரான, அதிருப்தியிலிருந்து தோன்றிய நடவடிக்கை இது. அதிகாரிகளுக்கும், கீழேயுள்ள போலீஸ்காரர்களுக்கும் இடையே ஏற்பட்ட பகைமையிலிருந்து தோன்றிய போராட்டமிது. அதைத் தொடர்ந்து, ஆயுதம் தாங்கிய போலீஸ்படையே கலைக்கப்பட்டுள்ளது, நூற்றுக்கணக்கானவர்கள் சிறைப்பிடிக்கப்பட்டுள்ளனர். மக்களை வேட்டையாடுவதற்கென்றே தயாரிக்கப்பட்ட இன்றைய ஆட்சியின் நம்பிக்கையான ஊன்றுகோலான போலீஸ்காரர்களுக்கென்று ஸ்தாபனம் அமைத்துக்கொள்ளும்பிரச்சினையில் அரசாங்கத்துடனும மோதிக் கொள்ளும் நிலைமை ஏற்பட்டுள்ளது.

[தொடரும்]

## நிலக்கரி தட்டுப்பாட்டால் மாணவர்களுக்கு பாதிப்பு

தஞ்சை, ஆக. 9—

நிலக்கரி தட்டுப்பாட்டால் தஞ்சை—நாகூர் ரெயில்கள் குறைக்கப்பட்டுள்ளன. எனவே காலையில் பூண்டி புஷ்பம் கல்லூரிக்குப் போகும் நேரத்திற்கும்,மாலையில் கல்லூரியிலிருந்துதிரும்பும் நேரத்திற்கும்,வசதியாக இதுவரை விடப்பட்ட ரயில்கள் நிறுத்தப்பட்டுவிட்டன.

இதனுல் பூண்டிபுஷ்பம் கல்லூரி மாணவர்கள் கால் கடுக்க நடந்தும் லாரிகளில் தொத்தியும் வந்தால்கூட கல்லூரி நேரத்திற்கு வந்து சேரவோ போகவே முடியவில்லை. பொது மக்களும் பெரும் அவதிக்குள்ளாகியுள்ளனர்.

உழைக்கும் ரயில்வேத் தொழிலாளர்கள் தங்கள் தங்கள் உரிமைக்காகப் போராடுவதால் நாட்டில் பொதுமக்கள் அவதிப்படுகிருர்கள் என்று கோபாவேசம் கொள்ளும் அரசு தனது கையாலாகாத்தனத்தால் நாடெங்கும் ரயில் போக்குவரத்தை முடமாக்கியுள்ளதற்கு என்ன பதில் சொல்வார்களோ?

இன்று (8-8-73) புஷ்பம் கல்லூரி மாணவப் பிரதிநிதி திருச்சி டிவிஷனல் மேலதிகாரியைச்சந்தித்துக் குறைகளை நிவர்த்தி செய்யவேண்டிக்கொண்டார்கள், ஆனுல் டிவிஷனல் மேலாளரோ கையை விரித்துவிட்டார்.

எனவே, காலவரையற்ற வேலைநிறுத்தத்தில் இறங்க மாணவர்கள் முடிவு செய்துள்ளனர்.

— இந்திய மாணவர் சங்கமும், மற்ற மாணவப் பகுதிகளும் இதில் கலந்து கொள்கின்றன.

### மாணவர் சங்கம் வேண்டுகோள்

மாணவர்களின் கல்வி முக்கியத்துவத்தைக் கருத்தில் கொண்டு உடனடியாக முன்போலவே ரெயில்களை விடும்படி இந்தியமாணவர் சங்கத்தின் (எஸ் எப்.ஐ.) தமிழ்மாநிலக்குழு செயலாளர் தோழர் பெ. மணியரசன் ரெயில்வே போர்டையும், அரசினரையும் வேண்டிக்கொள்கின்றனர்.

## சங்ககிரி சிமெண்ட் தொழிலாளர் 'தர்ணு'

சங்ககிரி, ஆக. 16—

காண்டராக்ட் முறை ஒழிப்பு மற்றும் இன்றைய விலைவாசிக்கேற்ற சம்பள உயர்வு பஞ்சப்படி உயர்வு முதலிய கோரிக்கைகளை வற்புறுத்தி, சிமெண்ட் தொழிலாளர்கள் கடந்த 4-ந் தேதி அன்று சங்ககிரி இந்தியா சிமெண்ட் ஆலை முன்பும், குவாரியிலும் தர்ணு போரட்டம் நடத்தினர்.

ஆலைமுன் சி ஐ டி யூ சங்க உதவித் தலைவா தோழர் சி. செல்வதாஸ், குவாரியில் சி ஐ டி யூ சங்க செயலர் தோழர். கே. கருணகரன், ஆகியோர் தாணுவை துவக்கி வைத்து வாழ்த்திப் பேசினர்.

ஆலையிலும், குவாரியிலும் காலை 8 முதல் மாலை 4 வரை தொழிலாளர்கள் தர்ணு போராட்டம் நடத்தினர். கோரிக்கையை வற்புத்றுதியும், இந்தியா சிமெண்ட் நிர்வாகத்தினரின் தொழிலாளர் விரோத நடவடிக்கைகளை எதிர்த்தும் உணர்ச்சிமிகு கோஷங்கள் எழுப்பினர்.

மாலையில் சி ஐ டி யூ மாநிலக்குழு உறுப்பினர் தோழர் வி. ராமசாமி தர்ணுவை முடித்துவைத்து சிமெண்ட் தொழிலாளர்களில் சம்பள உயர்வு கிடைக்க வேண்டிய அவசியத்தையும் அதற்காக சி ஐ டி யூ எடுத்துள்ள நடவடிக்கைகளையும் விளக்கினர்.

## பொள்ளாச்சி பொதுப்பணித்துறை தொழிலாளர்

# உண்ணுவிரதம் நீடிக்கிறது

### மார்க்சிஸ்ட் தலைவர்கள் வருகை

பொள்ளாச்சி, ஆக. 11—

**இங்கு கடந்த 5-ந் தேதி கொட்டும் மழையில் பொதுப்பணித் தொழிலாளர்கள் பெரும் ஆர்ப்பாட்ட ஊர்வலம் ஒன்றை நடத்தினர்.**

கடந்த ஜூலை 20-ந்தேதி முதல் தங்களது நியாயமான கோரிக்கைகளுக்காக இங்குள்ள தலைமைப் பொறியாளர் அலுவலகம் முன் உண்ணுவிரதம் போராட்டம் நடத்தி வரும், பரப்பலாறு ஆழியார் திட்ட பொதுப்பணித் தொழிலாளர்களுக்கு ஆதரவுதெரிவித்து இந்த ஆவேசமிக்க ஆர்ப்பாட்ட ஊர்வலம் நடந்தது.

**ஊர்வலத்தில் போலீஸ் கெடுபிடி**

பி. ஏ. பி. காலனியிலிருந்து நகரின் பல்வேறு வீதிகள் வழியே ஊர்வலம் செல்லும் என அறிவிக்கப்பட்டிருந்தது. பொள்ளாச்சி சப்-இன்ஸ்பெக்டர் உத்தரவின் பேரில் 5 கான்ஸ்டபிள்களும் ஒரு ஏ எஸ் ஐயும் ஊர்வலம் துவங்கும் இடத்திற்கு வந்து எல்லா வீதிகளின் வழியாகவும் ஊர்வலம் போகக்கூடாது என்றும், தாங்கள் குறிப்பிடும் வீதிகள் வழியாகத்தான் போக வேண்டுமென்றும் கெடுபிடி செய்தனர்.

ஊர்வலம் எந்தெந்த வழியாகச் செல்லவேண்டுமென்பதை போலீஸ் நிர்வாகமல்ல நிர்ணயித்து கொடுப்பது. என்றும், ஏற்கனவே நிர்ணயித்துள்ள வழியாகத்தான் ஊர்வலம் செல்லுமென்பதையும் தொழிற் சங்கத்தலைவர்கள் கருராகக் கூறிவிட்டனர்.

போலீஸ் நிர்வாகத்தின் மிரட்டலுக்குப் பணியாது தொழிலாளர்கள் ஆவேசத்துடன் கிளம்பி நிர்ணயித்த வழிகளில் கொட்டும் மழையிலும் விண்ணதிர முழக்கம் எழுப்பி வந்தனர்.

''மலையைப் பிளந்து— அணையை எழுப்பி— நீரைத் தேக்கி— நெடுவயல் பாய்ச்ச— சிந்திய ரத்தம் எங்கள் ரத்தம்— வியர்வை ரத்தம் சிந்திய நாங்கள்— வேலை நிரந்தரம் கேட்கின்றோம்; வேலை நிறுத்தம் செய்யுமுன்னே— வேலை நிரந்தரம் செய்திடுவீர்— பசுமைப் புரட்சி கண்டோரே! பட்டம் டாக்டர் பெற்றோரே, பாதை மாறிப் போகாதீர்— பதவிப் போதையில ஆடாதீர். போதிய ஊதியம் தருவதில்லை— பொதுப் பணித் துறையில் போனஸில்லை. பிச்சைக் காசு உயர்வில்லை —பிரசவ காலச் சலுகையில்லை. நியாயம் கேட்டுப் போராட்டம்— நடக்குது நாட்கள் ''பதினேழாய்'', நாட்டை ஆளும சாக்காரே— நாட்களை மேலும் கடத்தாதே!'' என ஆவேசமாக முழக்கங்களை எழுப்பிக் கொண்டு திருவள்ளுவர் திடலையடைந்தது.

**கே. முத்தையா ரமணி வருகை**

அங்கு நடைபெற்ற பொதுக்கூட்டத்திற்கு சங்கப் பொருளாளர் தோழர் கே சுகுமாரன் தலைமை வகித்தார்.

மில்தொழிலாளர் சங்க கிளை செயலாளர் தோழர் வி எம். ராமசாமி, சங்க செயலாளர் தோழர் ஆர். வெள்ளியங்கிரி, உப தலைவர் தோழர் வி ஈ. பால்ராஜ் மார்க்சிஸ்ட் கட்சியின் நகரச்செயலாளர் தோழர் கே. சி கருணாகரன் ஆகியோர் பேசியபின் 'தீக்கதிர்' ஆசிரியர் தோழர் கே. முத்தையாவும், சங்கத்தலைவரும் சி ஐ டி யூ வின் மாநிலத் தலைவருமான தோழர் கே. ரமணியும் தொழிலாளர்களின் கோரிக்கைகளை வற்புறுத்தியும் போராடும் தொழிலாளர்களுக்குவாழ்த்துத் தெரிவித்தும் பேசினர்.

**ஏ.பாலசுப்ரமண்யம் வருகை**

7-ந் தேதியன்று பொள்ளாச்சி (பி. ஏ. பி.) பிரதமப் பொறியாளர் அலுவலகம் முன்பு 10-வது நாளாக உண்ணுவிரதம் இருந்து வரும் பொதுப்பணித்துறை தொழிலாளர்களை, மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மாநிலச் செயலாளர் தோழர் ஏ. பாலசுப்ரமணியமும் சி ஐ டி யூ. மாநிலத் தலைவர் தோழர் கே. ரமணியும் நேரில் வந்து பார்த்து ஆதரவு தெரிவித்து தொழிலாளர்களுக்கு உற்சாக மூட்டினர்.

தலைவர்கள் வருகையால் போராடும் தொழிலாளர்கள் புத்துணர்வு பெற்றனர்.

**6வது அணி உண்ணுவிரதம்**

உண்ணுவிரதத்தின் 6-வது அணியை கடந்த 7-ந் தேதியன்று சங்கப் பொருளாளர் தோழர் கே. சுகுமாரன் துவக்கி வைத்துப் பேசினார்.

தோழர்கள் டி. சார்லஸ், எம் சன்னையன், கே.சுப்புராமன், எஸ. தண்டபாணி, கே. கிட்டான், பி. துரையன் ஆகியோர் உண்ணுவிரதம் மேற்கொண்டனர்.

**மறியல் வேலை நிறுத்தத்துக்கு ஆயத்தம்**

5—12—71-ல் நடந்த மாநாட்டில் வரையறுக்கப்பட்ட, **தங்களது நியாயமான** கோரிக்கைகள் விரைவில் நிறைவேற்றப்படவில்லையெனில், மறியலிலும் வேலை நிறுத்தப் போராட்டத்திலும் ஈடுபட தொழிலாளர்கள் ஆயத்தமாகி வருகின்றனர் என்று பொதுப் பணித்துறைத் தொழிலாளர் சங்கச் செயலாளர் தோழர் எஸ் விஜயராகவன் அறிவித்துள்ளார்.

இப் போராட்டங்களுக்கு பொதுமக்களும், விவசாயிகள், தொழிலாளர்கள், மாணவ-மாணவிகள் அரசு ஊழியர்கள் முதலிய அனைத்து பகுதியாளரும் ஆதரவு அளிக்கும்படி வேண்டியுள்ளார்.

---

மதுரை

கலெக்டர் ஆபீஸ் முன்பு

## மதுமரத் தொழிலாளர் உண்ணுவிரதம்

மதுரை, ஆக, 12—

கள்ளுக்கடைகள் மூடப்படுவதால் செய் தொழில் பாதிக்கப்படுவதை எதிர்த்தும் பாதிக்கப்படும் தொழிலாளர்களுக்கு மாற்றுத் தொழில் நிவாரணம் வழங்க கோரியும் இங்குள்ளமதுரை முகவை மாவட்டக் கலெக்டர்கள் அலுவலகங்கள் முன்பு மதுமரத் தொழிலாளர்கள் உண்ணுவிரதம் மேற்கொண்டு வருகிறார்கள்.

**உண்ணுவிரதம்**

13-ந் தேதியன்று வி பெரியணன், சு. மரியராஜ் ஆகியோர் தலைமையிலும்,

14-ம் தேதியன்று க. அய்யாவு, என் முத்து ஆகியோர் தலைமையிலும்,

15-ந்தேதியன்று கா.ராமுமாத்தூர் ராமன் ஆகியோர் தலைமையிலும், 50-க்கு மேற்பட்டோர் உண்ணுவிரதம் மேர்கொள்கிறார்கள். ஒவ்வொரு நாள் காலையிலும் பி.பி. சாவடியில் உள்ள மக்கள் படிப்பகத்திலிருந்து உண்ணுவிரதத் தோழர்கள் ஊர்வலமாக கலெக்டர் அலுவலகத்துக்கு அழைத்துச் செல்லப்படுகிறார்கள்.

**ஊர்வலம்**

16-ந்தேதிமாலை 4மணிக்கு உண்ணுவிரதம் முடிக்கப்பட்டு, கலெக்டர் அலுவலகத்திலிருந்து ஊர்வலமும் பொதுக்கூட்டமும் நடைபெறும்.

**ஆதரவு தாரீர்**

உண்ணுவிரதம் மேற்கொள்ள மதுமரத் தொழிலாளர்களுக்கு பல்வேறு சங்கங்களும், உழைப்பாளர் பகுதி மக்களும் தொடர்ந்து ஆதரவளித்து வருகின்றனர்.

---

## செங்கோட்டைதாலுகாவில்

# 38 விவசாயிகள் கைது

செங்கோட்டை, ஆக. 13—

**செங்கோட்டைத் தாலுகா மேக்கரை சிராம வட்டாரத்தில் திருவாவடுதுறை ஆதினத்திற்குச் சொந்தமான நிலத்தில் பல ஆண்டுகளாகச் சாகுபடி செய்து வந்த விவசாயிகளைப் போலீசார் கைது செய்துள்ளனர்.**

**இது பற்றி கூறப்படுவதாவது :-**

செங்கோட்டை, ஆக. 9—

செங்கோட்டை தாலுகா மேக்கரை கிராம வட்டாரத்தில் திருவாடுதுறை ஆதினத்திற்குச் சொந்தமான சுமார் 80 ஏக்கர் புன்செய் நிலம் சிலகாலமாகத் தரிசாகக் கிடந்தது தமிழக அரசு அந்நிலத்தைக் கடலைப் பண்ணை வைப்பதற்காக எடுப்பதாக இருந்தது. பிறகு அத்திட்டம் கைவிடப்பட்டதைத் தொடர்ந்து எண்பது ஏக்கர் நிலமும் தரிசாகக் கிடந்தது.

இதனால் மேக்கரை வட்டாரத்தில் வசிக்கும் சில விவசாயக் குடும்பங்கள் நிலத்தில் இறங்கி உழுது சோளம் சாகுபடி செய்ய ஆரம்பித்தனர். சோளம் நன்கு வளரும் வரை சும்மா பார்த்துக் கொண்டிருந்த திருவாவடுதுறை ஆதீன ஏஜண்ட், இந்தப் பயிரிடும் நிலமற்ற விவசாயிகளுக்கு அடவோலை போட்டுத தராமல், ஏக்கர் ஏழு ஏக்கர் என்று சொந்த நிலம் வைத்திருக்கும் வசதி படைத்த நிலசுவாண்தார்கள் பலருக்கு தனித்தனியாகப்பிரித்து அடைவோலை போட்டுக் கொடுத்திருக்கிறதாம்.

நிலமற்றவிவசாயிகளிடம் ஆதீனஏஜெண்டிற்கு கப்பப் பணம்எதுவும் கிடைக்கவழி இல்லை என்றும், வசதி படைத்தவர் ஏஜெண்டிற்கு கைநிறையபணம்கொடுத்து கட்டுக்குத்தகை அடைவோலை போட்டிருப்பதாகவும் கூறபபடுகிறது-

ஆனால் விவசாயிகள் தங்கள் உரிமைகளுக்காகப் போராடுவது என்று முடிவு செய்தனர் ஏரும கலப்பையும் ஏந்தி வயல்களில் உழவுக்கு வந்தநிலச்சுவான்தார்களின் கூலி ஆட்களைத் தடுத்து நிறுத்தினர். தாங்களே நேரடியாகத் தங்கள் அனுபவத்தில் உள்ள நிலத்தை உழுதனர்.

இதைக் கோள்விப் பட்டதும் போலியாக அடைவோலை வெற்றிக்கும் நிலச்சுவான்தார்கள் போலீஸாருடன் கடந்த 7-ந் தேதி ஸ்தலத்திற்கு வந்தனர். உழுதுகொண்டிருக்கும் விவசாயிகள் 38 பேர்களைப் போலீஸ் கைதுசெய்தனர்.

கைது செய்யப்பட்ட 38 விவசாயிகளுக்கு முன் தினம் மாலை 3 மணியிலிருந்து மறுநாள் காலை 11 மணி வரை எவ்வித உணவும் கொடுக்கப்படவில்லை.

---

## காவேரி மில் தொழிலாளர்கள்

# உண்ணுவிரதம்

## 25-ந் தேதிக்குள் கோரிக்கையை ஏற்காவிடில்

# வேலை நிறுத்தம்

காவேரிநகர், ஆக. 13—

கடந்த 9-ம் தேதி முதல், காவேரி மில் தொழிலாளர்கள் தொடர் உண்ணுவிரதம் மேற்கொண்டுள்ளார்கள்.

9 3—72-ந் தேதிய ஒப்பந்தத்தை முழுமையாக அமுல் நடத்தக கோரியும், தற்காலிகத் தொழிலாளர்களுக்கும் வேலைக்குத் தகுந்த ஊதியம் கோரியும், உற்பத்தியுடன் இணைக்கப்படாத அடிப்படைச் சம்பள உயர்வு ரூ 45 கோரியும், மற்றும் கொடுபடாத போனஸ், சேசுவல் லீவு, சம்பள வெட்டுப பணம் முதலிய கோரிக்கைகளை வற்புறுத்தியும் இந்த உண்ணுவிரதப் போராட்டம் நடக்கிறது.

[illegible]9-ந் தேதியன்று எஸ் ஜெயராமன், ஆர். பாண்டியன், ஆர். சின்னையா, குட்டாறு ஆகியோர் உண்ணுவிரதம் இருந்தனர். உண்ணுவிரதத்தை சி ஐ டி யூ சங்கச் செயலாளர் தோழர் சி. கே. ரெங்கசாமி துவக்கி வைத்துப் பேசினார். மற்றும் திருமால், பழனியப்பன், ராமனுதன் ஆகியோரும் பேசினார்கள்.

திருச்சி ஜில்லா பஞ்சாலைத் தொழிலாளர் சங்கமும் (சி ஐ டி யூ) தற்காலிகத் தொழிலாளர்களும் சேர்ந்து நடத்தும் இப் போராட்டத்துக்கு இந்திய தேசிப் பஞ்சாலைத் தொழிலாளர் சங்கம் (இந்திரா காங்கிரஸ்), மார்க்சிஸ்ட கம்யூனிஸ்ட் கட்சி, அதிமுக, வியாபாரிகள் சங்கம் முதலியன ஆதரவளித்துள்ளன.

வருகிற 25-ந் தேதிக்குள் கோரிக்கைகள் நிறைவேற்றப்படாவிட்டால் வேலை நிறுத்தம் செய்ய முடிவு செய்து நிர்வாகத்துக்கு நோட்டீசும கொடுக்கப்பட்டுள்ளது.

---

### இந்தியாவின்...

(1-ஆம் பக்கத் தொடர்ச்சி)

மட்டும் தெரியாமல் போய் விட்டதா? இது கருணாநிதியின் அனுமதியுடன் நடந்த தாக்குதல்தான் என்பதற்கு ஐயமில்லை, வன்முறையால் திண்டுக்கல்லில் வெற்றி காண விழைந்த கருணாநிதிக்கு கம்யூனிஸ்டுகளின் விழிப்பால் திண்டுக்கல்லில் வன்முறையை காண்பிக்க முடியாமல் போய்விட்டது. அந்த ஏமாற்றத்தை கத்தியைத்தூக்கி தணித்துக் கொள்கிறார் கருணாநிதி.

கருணாநிதிக்கு ஒன்று மட்டும் சொல்ல விரும்புகின்றோம். எங்கள் அருமைத் தோழன்; சி ஐ டி யூ தலைவன் தோழர்சிந்தன் தலையில் அடித்த அடிகளை, உடம்பில் இறக்கிய கத்திகளை, கருணாநிதி, உமது ஆட்சியின் சவப்பெட்டிக்கு அடிக்த ஆணிகளாகக் கருதிக் கொள்வீர்.

**இந்திரா பாடம்**

இந்த கத்தி வேலைகூட கருணாநிதிக்கு சொந்தமானதல்ல. இந்திராவிடமிருந்து இரவல் வாங்கியது தான்.

இந்திரா காங்கிரசுக்குள்ளே மேற்கு வங்காளத்தில் ''ஒருவரை யொருவர் குத்தமாட்டோம்'' என்ற ஆத்திசூடி ஒப்பந்தம் செய்யப்படுகிறது,

இந்து பத்திரிகை எழுகிறது—மார்க்சிஸ்டுகளை ஒழிக்க ரே உபயோகித்த ரவுடிகள் காங்கிரசுக்கே தலைவலி ஆகி விட்டனர்'' என்று. ஆம் மார்க்சிஸ்டுகளை ஒடுக்க காங்கிரஸ் உபயோகித்த ரவுடிகளின் கத்திக்கு காங்கிரஸ் எம் எல் ஏ வே பலியாகி விட்டார்.

அப்படிப்பட்ட கட்சி தலைவி இந்திராவிடம் தான் கருணாநிதி கத்தி வேலை கற்றுள்ளார். ஆனால் கருணாநிதியின் கத்தி வேலையை சந்திக்க எங்கள் இயக்கத்துக்கு வலுவுள்ளது.

**போராட்டகளம்**

இன்று இந்தியாவே போராட்டகளமாகியுள்ளது மக்கள் போராட்டங்களை அடித்து ஒடுக்க சம்பளம் கொடுத்து அமைக்கப்பட்ட போலீஸ்காரன் கூட உ. பி. யிலே போராடினான். 25 வருட காலம் உழைக்கும் வர்க்கத்தை அடித்த பிறகு அவனுடைய குடும்பம் வாழ்ந்ததா? இல்லை. எனவே தான் போலீஸ் காரனும் போராட்டகளம் புகுந்துள்ளான். உ பி. யில் அதி பயங்கர அடக்கு முறையை சந்தித்த பிறகும் குஜராத்திலும் போலீஸ்காரர் சங்கம அமைக்கப்பட்டுவிட்டது.

**போலீஸ்காரர்களுக்கு......**

கருநிணுதியேநீங்கள்இன்று போலீஸ் ஒன்றை மட்டும் நம்பித்தானே சாகசங்களில் இறங்குகிறீர்? உ. பி. திரிபாதிக்கு எதிராக போலீஸ் காரர்கள் துப்பாக்கி திரும்பியது போல உனக்கெதிராகவும் போலீஸ்காரர் துப்பாக்கி திரும்பும். அதற்கு சந்தேகமில்லை, இந்தியாவிலேயே போலீஸ்காரர்களில் அதிக வேலைப்பளுவை தாங்கிக்கொள்வது தமிழகப் போலீஸ்தான் குறைச்சலான சம்பளமும் இவனுக்குத்தான், இந்த வண்டி அதிகநாள் ஓடாது.

போலீஸ்காரனை உபயோகித்து கருணாநிதி எங்களைச் சுடலாம், எங்கள் தோழர்கள் நெஞ்சில் கத்தி இறக்கலாம். ஆனால் அந்த போலீஸ்காரர்கள் நெஞ்சம் குமுறிக் கொண்டிருக்கிறது. மறந்துவிடாதீர்கள்.

போலீஸ்காரர்களுக்கு எங்கள் பணிவான வேண்டுகோள் ஒன்று. கருணாநிதி ஆட்சியில் உங்களுக்கு என்ன கதி ஏற்படும் என்பதை நாங்கள் நன்குதெரிந்தவர்கள், கருணாநிதியை நம்பி நீங்கள் அதிமக துள்ள வேண்டாம்,

**அசிஸ்டண்ட் கமிஷனர் கள்ளக்கடத்தல் விவகாரம்**

சென்னையில் கள்ளக் கடத்தலுக்கு என்று சந்தேகப்பட்டு அசிஸ்டன்ட் கமிஷனருடன் துணைபோக மறுத்த போலீஸ் ஜீப் டிரைவர் நள்ளிரவில் கொல்லப்பட்டார்.பிறகு 'ஆக்சிடன்ட் டெத்' (விபதது மரணம்) என்று முடிவும் எழுதப்பட்டது.

ஆனால் அடுத்த நாள் சந்தேகம் அடைந்தசகபோலீஸ் காரர்கள் தேடி சென்று முறையிட்டது எங்கள் சென்னை மாவட்டச்செயலாளர் தோழர் பரமேஸ்வரனிடம்தான்! அன்று மாலைக் கூட்டத்தில் தோழர்பரமேஸ்வரன்போலீஸ் ஜீப் டிரைவர் கொல்லப்பட்ட கோரச் செயலை விவரித்தார். அதன் பயனாக அந்த அசிஸ்டன்ட் கமிஷனர் வேலை நீக்கம் செய்யப்பட்டார்.

**டாட்டா பிர்லா பிள்ளைகளா?**

எனவே போலீஸ்காரர்களே உங்களுக்கு ஆபத்து வந்தாலும் உதவ மார்க்சிஸ்டுகள்தான் இருப்பார்கள்; தொழிலாளிவர்க்கம் தான் இருக்கும். எங்கள் உதவி தேவைப்படாமல் இருக்க நீங்கள் என்ன டாட்டா - பிர்லா பிள்ளைகளா? நீங்களும சாதாரண குப்பன் சுப்பன் குடும்பத்தினர்தான். வேறு வேலை கிடைக்காததால்தான் போலீஸ் வேலைக்கு வந்துள்ளீர்கள்.

அதையும் மறந்துவிட்டு போராடும் மக்களுக்கு எதிராக தடியெடுத்துதனிமைப்பட வேண்டுடாம என்று போலீஸ்காரர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.இவ்வாறு தோழர் உமாநாத பேசி முடித்தார். தோழர் உமாநாத்துக்கு பல்வேறு சங்கங்கள் கட்சி கிளைகள் சார்பாக மாலையும் மாலைக்காகப் பணமும் அளிக்கப்பட்டன.

இக் கூட்டத்தில் தமிழக மின் தொழிலாளர் சங்க மத்திய அமைப்புச் செயலாளர் தோழர் து. ஜானகிராமனும் பேசினார்.

---

## குமரிஅரசுரப்பர்தோட்டங்களில்

### தோட்ட நலச் சட்டம் மீறப்படுகிறது

### ஜே. ஹேமசந்திரன் அறிக்கை

நாகர் கோயில், ஆக.13—

குமரிமாவட்ட அரசுரப்பர் தோட்டங்களில் 'ஒரு தொழிலாளிக்கு ஒரு வீடு' என்ற தோட்டத் தொழிலாளர் நலச்சட்டம் மீறப்படுகிறது. இது குறித்து சி ஐ டி யூ, குமரிமாவட்ட செயலாளர் தோழர் ஜே. ஹேமச்சந்திரன் வெளியிட்டுள்ள அறிக்கை வருமாறு.

குமரிமாவட்ட அரசுரப்பர் தோட்டங்களில் ஒரு தொழிலாளிக்கு ஒரு வீடு ஒதுக்குவதற்குப பதிலாக ஒரே வீட்டில் மூன்றும் நான்கு குடும்பங்கள் அடைக்கப்படுகின்றன.

**ஐ.என்.டி.யூ.சி. சதி**

இது போன்ற அதிகாரிகளின் காட்டு மிராண்டிச் செயல்களுக்கு ஐ. என். டி. யூ. சி. தலைமை அரசு வனப் பாதுகாவலரிடம் ரகசியமாக சம்மதம் தெரிவித்துள்ளதாக அதிகாரிகளே சொல்லியுள்ளனர்.

சென்ற 8-ம்தேதி தோட்ட ஆய்வாளர் (சீப இன்ஸ்பெக்டர் ஆப் பிளான்டேஷன்ஸ்) தோட்டங்களுக்குச்சென்று ஒரு வீட்டிற்குள் பல குடும்பங்கள் அடைக்கப்பட்டிருக்கும் சாட்சியைப்பார்த்து விட்டுச் சென்றார்.

இதற்கிடையே கோட்ட அதிகாரிகள் காளி பிள்ளை, தோமஸ் ஆகிய தொழிலாளிகளிடம் அவர்கள தங்கிவந்த இடத்தைக் காலி செய்துவிட்டு இரண்டு இரண்டு குடும்பங்கள் வசிக்கின்ற இரு விடுகளில் சென்று மூன்றாவது குடும்பமாகத் தங்க வற்புறுத்தியுள்ளார்கள். அதிகாரிகளின் இந்த உத்திரவுக்கு தொழிலாளிகள் இசையவில்லை.

**அனியாய வேலை நீக்கம்**

உடனடியாக அந்த இரண்டு தொழிலாளிகளும் 25 நாட்களுக்கு வேலை நீக்கம் செய்யபபட்டுள்ளார்கள்.

இதற்குக்கண்டனம் தெரிவித்து அரசு ரப்பர் தோட்டம் கீரிப்பாறைப் பிரிவுத் தொழிலாளர்கள் ஒரு நாள் அடையாள வேலை நிறுத்தம்கூட செய்துள்ளார்கள்.

**சத்தியாக்கிரகம்**

இப்பொழுது வேலை நீக்கம் வாபஸ் வாங்கவேண்டும் என்ற கோரிக்கையுடன தொழிலாளர்கள் தோட்ட வாசலில் சத்தியாக்கிரகப் போராட்டம் நடத்துகிறார்கள்.

இது சம்பந்தமாக கன்னியாகுமரி ஜில்லா தோட்டத் தொழிலாளர் சங்கம் (சி. ஐ. டி. யூ) கொடுத்த புகாரின் அடிப்படையில், மதுரை டெபுடி லேபர் கமிஷனர் 9—3—73 அன்றுநாகர்கோவிலில்இது குறித்து பேச்சுவார்த்தை நடத்துவதாகத் தெரிவித்திருந்தார்.

**அதிகாரியின் ஆணவப் போக்கு**

ஆனால் சங்கநிர்வாகிகள் பேச்சு வார்த்தைக்காகக் காத்திருந்த பிறகும் வனப் பாதுகாவலர் பேச்சுவார்த்தையில் கலந்துகொள்ளவில்லை.

அரசு ரப்பர் தோட்ட நிர்வாகம சட்டத்தை மீறுவது மட்டுமல்ல அதிகாரத்தை துஷ்பிரயோகம் செய்து தொழிலாளர்களை பழிவாங்கவும் செய்கின்றனர். அது மட்டுமலல டெபுடி லேபர் கமிஷனர் ஏற்பாடு செய்த பேச்சு வார்த்தையிலேயே கலந்துக்கொள்ளவுமில்லை.

அதிகாரி வர்க்கத்தின் இந்த துக்ளக் தர்பாரை எதிர்தது தோற்கடிக்க தொழிலாளிகள் கிளர்ந்தெழுந்துவிட்டனர்.

தக்க சமயத்தில் அரசு இப்பிரச்சினையில் தலையிட்டு சுமுகமான முடிவை ஏற்படுத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

இவ்வாறு தோழர் ஜே. ஹேமச்சந்திரன் தனது அறிக்கையில் கூறியுள்ளார்.

---

குமரி மாவட்டத்தில்

## அரிசிப் போராட்டம்

### மீண்டும்சிறைகள் நிரம்புகின்றன

நாகர்கோயில் ஆக. 12—

குமரி மாவட்டம் முழுதும் குடும்பக் கார்டு வாயிலாக குறைந்த விலையில் அரிசி வினியோகிக்க வேண்டும் நெல்லை-குமரி செக்போஸ்டுகள் நீக்கப்பட வேண்டும் போன்ற கோரிக்கைகளை முன் வைத்து மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தலைமையில் தொடர்ந்து மறியல் நடக்கிறது.

ஆகஸ்ட 9-ம் தேதி விளவங்கோடு தாலுகா, தேங்காப்பட்டினம் கிராம அலுவலகம் முன்னர் தேங்காப்பட்டினம் கிளைச் செயலாளர்தோழர் செய்யதுமுகமது, தலைமையில் 5 தோழர்கள மறியல் செய்து கைதானார்கள்.

களியல் கிராம அலுவலகம் முன்னர் கடையல் கிளைச் செயலாளர் தோழர் புஷ்பாகரன் தலைமையில் 11 தோழர்கள் மறியல் செய்து கைதானார்கள்.

**குழித்துறை**

நேற்று விளவங்கோடு தாலுகா அலுவலகம முன்னர் மறியல் செய்ததாக 21 தோழர்கள் கைது செய்யப்பட்டார்கள். மறியலுக்கு முன்னர் தோழர் மணி தலைமையில் கோரிக்கை கோஷங்களை விண்ணதிர எழுப்பிக் கொண்டு குழித்துறை நகரைச் சுற்றி பிரும்மாண்ட ஊர்வலம் நடைபெற்றது.

தலக்குளம் கிராம அலுவலகம் முன்னர் மறியல் செய்து மூன்று தோழர்கள் கைதானார்கள்.

**ஆர்ப்பாட்டம்**

அரசு உணவு கார்ப்பரேஷன் கடை ஒன்று சுசீந்திரத்தில் உள்ளது. இங்கு குறைந்த அளவு அரிசியே வினியோகிக்கப்படுகிறது. மேலும் கிலோ ஒன்றுக்கு ரூ 1-40 என்று விலையும்வசூலிக்கப்படுகிறது. இதை எதிர்த்து நூற்றுக்கணக்கான மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் தொண்டர்கள்இந்த கடை முன்னர் நேற்று நடத்தினர்.

சிண்டிகேட் கட்சியினர் எந்த முறையான முடிவும் காணாத போராட்டத்தை கைவிட்டதில் குமரிமாவட்ட மக்கள் ஆத்திரமும சிண்டிகேட் கட்சி மீது வெறுப்பும் அடைந்துள்ளார்கள்,

---

## போராட்டவிளக்கப் பொதுக்கூட்டம்

தக்கலை, ஆக. 10—

5—8—73-ல் முள்ளங்கினாவிளை சந்திப்பில் தோழா ஜெபஸ்தியான் தலைமையில் மார்க்சிஸ்ட கம்யூனிஸ்ட் கட்சிப்பொதுக்கூட்டம் நடைபெற்றது.

குமரிமாவட்டத்தில் நடைபெறும் 'அரிசி போராட்டம்' பற்றி, தோழர்கள் பி. திவாகரன், பி. சாமுவேல பி. ஏ. பி.எல்,ஏ. எஸ். கிருஷ்ணன் குட்டி ஆகியோர் பேசினர்.

---

## கோகா-கோலா தொழிலாளர்கள்

# மறியலுக்கு தயாராகின்றனர்

மதுரை, ஆக. 12—

கோகோ-கோலா தொழிலாளர்கள் கடந்த 58 நாட்களுக்கு மேலாக போக்குவரத்து பிரிவைச் சேர்ந்த ஒரு தொழிலாளியை வேலை நீக்கம் செய்ததை எதிர்த்தும், நியாயமானகோரிக்கைகளுக்காகவும் கடந்த 58 நாட்களாகப் போராடி வருவதும் போராடி வரும் மதுரை கோகோ—கோலா தொழிலாளர்கள் எவ்விதத் தீர்வும ஏற்படாததால், மறியலில் குதிக்க முடிவு செய்துள்ளனர்.

தமிழக அரசின் தலையீட்டைக் கோரி கடந்த 26—7—73-ந் தேதி முதல் தொழிற்சாலை வாயிலில் தொழிலாளர்கள் தொடர் உண்ணுவிரதம் நடத்தி வந்தார்கள்.

மேலும் சங்கத் தலைவர் தோழா கே வாசுதேவனும், கலெக்டர் அலுவலகம்முன் கடந்த 2-8-73, 4-8-73 முடிய உண்ணுவிரதம் இருந்தார். இதுவரை நிர்வாகம் எவ்விதமான உடன்பாட்டுக்கும், வாரத காரணத்தினால் தொழிலாளர்கள் மறியலுக்கான ஏற்பாட்டை செய்து கொண்டிருக்கின்றனர்.

எனவே தொழிலாளர்களின் தொடர் உண்ணுவிரதத்தை கடந்த 10-ம் தேதியன்று காலை 7 மணிக்கு சங்கத் தலைவர் தோழர் கே. வாசுதேவன் முடித்து வைத்தார்.

---

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில், தீக்கதிர் அச்சகத்தில், (13, முதலசந்து, வடக்குச் சித்திரைவீதி, மதுரை-1) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே. முத்தையா.

---

## நடக்க இருப்பவை

**அடச்சாணியில்**

அமபைத்தாலுகா விவசாயிகள்சங்க

**பேரவைக் கூட்டம்**

14—8—73ம்தேதி மாலை 4 மணிக்கு நடைபெறும்.

இரவு 7 மணிக்கு

**பொதுக்கூட்டம்**

தோழர்கள்,

**ஏ. நல்லசிவன்**

பி. சொர்ணம்
ராமையாத்தேவர்
கா. வையாபாண்டியன்
சொக்கலிங்கம்
இசக்கி
கைகொண்டான்
சுப்பையா

மற்றும் பலர் பேசுவர்

இரவு 9 மணிக்கு மதுரை

**குமார் குழுவின்**

இன்னிசைக் கச்சேரி நடைபெறும்

ஃ ஃ ஃ

**பொன்னமராவதியில்**

விலைவாசி உயர்வு எதிர்ப்பு ஊர்வலமும்

**'தீக்கதிர்' நிதியளிப்பு பொதுக் கூட்டமும்**

18—8—73 சனி மாலை 6 மணிக்கு

பஸ் ஸ்டாப் வடபுறமுள்ள இராமமூர்த்தி திடலில்

தோழர்

**கே. கிருஷ்ணன் குட்டி**

தலைமையில்

தோழர்கள்

**பாப்பாஉமாநாத்**

பெரி குமாரவேல்
கா சின்னையா
எம் பி அச்சுதன்
டி ஏ வெங்கடாசலம்
கா பழனிச்சாமி
அ ராமலிங்கம்
நா பொன்னுசாமி
பழ சுப்பையா
சண்முகம்

ஆகியோர் பேசுவர்.

**ஊர்வலம்**

கட்சி அலுவலகத்திலிருந்து மாலை 4 மணிக்கு புறப்படும்

ஃ ஃ ஃ

**விக்கிரமசிங்கபுரம்**

பஞ்சாலைத் தொழிலாளர் சங்கத்தின்

**33-வது ஆண்டுவிழா பேரவை**

15—8—73 காலை 9 மணிக்கு சங்க அலுவலகத்தில் நடைபெறும்.

இரவு 7 மணிக்கு

**மூன்று லாம்பு திடலில்**

பொதுக்கூட்டம்

தோழர்கள்

ஏ, நல்லசிவன்
பி. சொரணம்
சி. என். வாசுதேவன்
எஸ். ஆண்டி
எஸ். அழகு

மற்றும் பலர் பேசுவர்.

இரவு 9 மணிக்கு மதுரை

**குமார் குழுவினரின்**

இன்னிசைக் கச்சேரி நடைபெறும்.